# RAJAPUT HEROES

## ராஜபுத்ர வீரர்கள்

BY

T. LAKSHMINARAYANA AIYANGAR, B.A.

*Assistant, Salem College, Salem*




MADRAS:

C. COOMARASAWMY NAIDU & SONS

1920

 [Price 6 As.

# ராஜபுத்ர வீரர்கள்

இது
T. லக்ஷ்மிநாராயண ஐயங்கார், B. A.,
எழுதியது




சென்னை:
ஸி. குமாரசாமி நாயுடு சன்ஸ்
ரெஜிஸ்தர் செய்தது]     1920     [விலை 6 அணா

# முகவுரை

இந்துதேச சரித்திரத்தில் முகம்மதியர்களோடு போராடிய ராஜபுத்ர அரசர்களுள் முக்கியராகிய சித்தூர் ராணுக்களைப்பற்றி அநேகர் கேள்விப்பட்டிருக்கலாம். சித்தூர் என்பது ராஜபுதனத்திலுள்ள மீவார நாட்டின் தலைநகரா யிருந்தது. அங்கிருந்த ராஜபுத்ரர் சிசோதயர் எனப்படுவர். இவர்களுடைய வம்சத்தில் தோன்றிய வீரர்களைப்பற்றியே பின்வரும் பக்கங்களில் எழுதப்பட்டுள்ளது.

ராஜபுத்ரர்களுடைய சரித்திரத்தைப் பற்றியும் அவர்களுடைய வெகு அற்புதமான வீரவாழ்க்கையைப்பற்றியும் இங்கிலீஷ் பாஷையில் கர்னல் டாட் (Col. Todd.) முதலிய பிரசித்தி பெற்ற சரித்திரகர்த்தாக்கள் விஸ்தாரமாய் எழுதி யிருக்கிறார்கள். அவைகளின் சாராம்சத்தைச் சுருக்கித் தமிழர்கள் எளிதாகத் தெரிந்துகொள்ளும் படியாக இது எழுதலாயிற்று. ராஜபுத்ர வீரர்களைப்பற்றித் தனித்தனியே எழுதி யிருப்பினும், அவ்வரலாறுகளுள் சித்தூர் நாட்டுச் சரித்திரம் முழுவதுமே தொடர்ச்சியாக வந்திருப்பதைக் காணலாம்.

படிப்போர்கள் இதில் காணப்படும் குற்றங்குறைகளைப் பொறுப்பதோடு அவைகளைத் தயைசெய்து எனக்கு எடுத்துக் காட்டுவார்களாயின் அந் நன்றியை என்றும் மறவேன்.

T. L. N.

# பொருளடக்கம்

# ராஜபுத்ர வீரர்கள்

## 1. சிசோதயர்களின் பூர்விகம்

ராஜபுதனத்திலுள்ள முப்பத்தாறு ராஜவம்சத்தினரும் சூரியகுலம், சந்திரகுலம், அக்கினிகுலம் ஆகிய இம் மூன்று குலத்தினுள் ஒன்றைச் சேர்ந்தவராவர். சூரியகுல திலகமென விளங்கிய ஸ்ரீராமபிரானுடைய புதல்வர்களாகிய குச லவர்களில் லவனுல் கட்டப்பட்டதும் தற்போது லாகூர் என்று வழங்கும் நகரமுமாகிய லவக்கோட்டையில் அவனுடைய சந்ததியார் ஐம்பத்தாறு தலைமுறைவரையில் அரசாண்டு வந்தனர். அவர்களுள் கனகசேனன் என்பவன் ஐம்பத்தாறுவது அரசன் இவன் சுமார் கி. பி. 145ம் வருஷத்தில் தன் நகரை விட்டுத் தெற்கே ஸௌராஷ்ட்ர தீபகற்பத்தை நோக்கி வந்து அங்கே அரசுபுரிந்துகொண் டிருந்த பிரமர வம்ச ராஜபுத்ரன் ஒருவனைத் தோற்கடித்து அவனுக்கு உரிமையா யிருந்த வீரநகரம் என்னும் நகரையும் பிடுங்கிக்கொண்டு அதையே தன்னுடைய தலைநக ராக்கிக்கொண்டான். கனகசேனன் காலத்திற்குப் பிறகு அவனுடைய ராஜ்பத்தை முந்நூறு வருஷ காலம் அவன் சந்ததியிலேயே தோன்றிய ஒன்பது

அரசர்கள் ஆண்டுவந்தார்களென்றும், ஆனால் ராஜ்யத்தின் தலைநகர்மட்டும் ஒரே இடமா யில்லாமலிருந்து, கடைசியில் வல்லவிபுரம் என்னும் நகரமே தலைநகரமாயிருந்த தென்றும் தெரியவருகிறது.

கி. பி. 524ம் வருஷத்தில் ஸிதியர்கள் இந்த ராஜ்யத்தின்மீது படையெடுத்து வந்து, வல்லவிபுரத்தையும் தாக்கித் தொம்சப்படுத்தினார்கள். அப்போது அந்நகரில் மாண்டுபோன ஜனங்கள் அநேகர். அந்நகர் மகாராணி மாத்திரம் கோட்டைக்கு வெகு தூரத்திற் கப்பால் லோகமாதா பவானியம்மன் கோவில் உள்ள தன் ஊருக்குப் போய்த் தான் பெறவிருக்கும் குழந்தையின் க்ஷேமத்தை வேண்டிக்கொண்டு திரும்பி வரும்போது தன் நகர் ஸிதியர்களால் தாக்குண்டதையும், தன் கணவனும் அநேக ஆயிரம் பிரஜைகளும் மாண்டுபோன செய்தியையும் கேட்டு ஆறாத் துயரங்கொண்டு அருகிலிருந்த ஒரு மலைக் குகைக்குள் புகுந்திருந்தாள். அங்கேயே அவளுக்கு ஓர் ஆண்குழந்தையும் பிறந்தது. கொஞ்சநாள் கழித்து அக் குழந்தையை எடுத்துக்கொண்டு தன் வீட்டுக்குப் போய்க் கமலாவதி என்னும் ஒரு பிராமண ஸ்திரீயிடம் அதை ஒப்புவித்து, குழந்தையைப் பிராமண வழியிலேயே பழக்கித் தக்க பருவத்தில் ஒரு ராஜபுத்ரக் கன்னிகையைத் தேடி அவனுக்கு மணம்புரிவிக்கும்படி சொல்லிவிட்டு உடனே அக்கினிப் பிரவேசம் செய்து விட்டாள்.

கமலாவதி இக் குழந்தையைத் தன் மகனோடு கூடவே அருமை பாராட்டி வளர்த்துவந்தாள். அவன் குகையில் பிறந்ததினால் குகன் என்று பெயரிட்டாள். இக் காரணத்தினால் அவன் சந்ததியாருக்குக்

குகலோதியர் என்ற பெயர் வந்தது. குகன் பன்னிரண்டு பிராயத்திலேயே அடக்க முடியாத துடுக்குள்ளவனு யிருந்தான். அப்போதே காடு காடாய்ச் சுற்றுவதும் அங்குள்ள பில் என்னும் மலையாளிகளுடன் சேர்ந்து திரிவதுமா யிருந்தான். அம்மலையாளிகளின் முரட்டுச் சுபாவத்தைக் கண்டு களித்துக்கொண் டிருப்பானே யொழியத் தன் வீட்டாரைச் சேர்ந்த பிராமணர்களின் சாத்துவிகம் அவனுக்குக் கொஞ்சமேனும் பிடிக்கவில்லை. இவ்வாண்பிள்ளையின் சௌந்தரியத்தையும், பலத்தையும், தைரியத்தையும் கண்டு அம் மலையாளிகள் மெச்சுவார்கள். கொஞ்சக் காலத்திற்குள் தன்னுடைய வீரச்செயல்களால் அவர்களை வியக்கச்செய்து அவர்கள் மனத்தை முழுதும் கவர்ந்துகொண்டான். பிற்கு அவர்கள் இவனுக்கே தங்களுடைய மலைநாட்டரசு கிடைக்க வேண்டுமென்று அவாவி, எல்லோரும் ஏகோபித்து அவ்வாறே முடிசூட்டினார்கள்.

இம் மலைநாட்டிலேயே குகனும் அவனது சந்ததியாரும் ஒன்பது தலைமுறைகளாக 250 வருஷ காலம் ஆண்டுவந்தனர். ஒன்பதாவது நாகதீதன் என்பவன் அம் மலைநாட்டாரோடு சண்டைபோட்டு அவர்களால் கொல்லப்பட்டான். கனகசேனன் வம்சம் இதனோடு அழிந்துபோகும்போ லிருந்தது. நாகதிதனுடைய கைக்குழந்தையாகிய பப்பா என்னும் ஓர் ஆண் சிசுவை மாத்திரம் சில பிராமணர்கள் எடுத்துச் சென்று ஜாக்கிரதையாய் வளர்த்து வந்தார்கள். இந்தப் பிராமணர்களும் குகனை வளர்த்துக் கனகசேனர் வம்சத்தைப் பாதுகாத்த கமலாவதியின் ஸந்ததிபாராகவே யிருந்தமை வியக்கத் தக்கது.

பப்பாவின் இளமைப் பருவத்தைப் பற்றி அநேக கதைகள் உண்டு. சிறு பையனு யிருக்கும் போது பப்பா பசுக்களை ஓட்டிக்கொண்டு காட்டுக்குப் போய் அவைகளை மேய்த்து வருவது வழக்கம். ஒருநாள் காட்டில் மாடுமேய்த்துக்கொண் டிருக்கும் போது, அருகிலுள்ள சோளங்கி ராஜபுத்ரத் தலைவனது புத்திரி சில கன்னிகைகளுடன் அதே காட்டிற்கு ஊஞ்சலாடி விளையாடிப் பொழுதுபோக்கும்வண்ணம் வந்தாள். வந்தவர்கள் மரத்தில் ஊஞ்சல் கட்டக் கயிறு கொண்டுவர மறந்துவிட்டதனுல் பக்கத்தில் மாடு மேய்த்துக்கொண் டிருந்த பப்பாவினிடம் சென்று ஒரு கயிறு இரந்தனர். இதற்குப் பப்பா அவர்கள் ஊஞ்சல் விளையாட்டுக்கு முன் ஒரு விவாக விளையாட்டுக்கு உடன்பட்டால் தான் கயிறு கொடுப்பதாகச் சொன்னுன். அவ்வாறே விவாக விளையாட்டு ஆரம்பித்தார்கள். பப்பாவையும் அந்த ராஜபுத்ரக் கன்னிகையையும்சேர உட்காரவைத்து அவர்களுடைய வஸ்திரங்களின் நுனியை முடிபோட்டு அவர்களைச் சுற்றிலும் விவாககோலமாகவே நின்றுகொண்டு இவ் விளையாட்டை உண்மையான விவாகம்போலவே நடத்தினுர்கள். பின்னுல் இவ் விளையாட்டு வினையாகவே முடிந்தது.

இது நடந்த கொஞ்ச நாளைக்கெல்லாம் இந்த ராஜ புத்ரியின் கல்யாணத்திற்காக அவள் தகப்பன் தன் புரோகிதனை அழைத்து அவளுடைய ஜாதகத்தைப் பார்த்தபோது அப் புரோகிதன் அவளுக்கு முந்தியே விவாகம் நடந்திருக்க வேண்டு மென்றுன். இச் செய்தி கேட்டதும் தகப்பன் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்தான். காட்டில் நடந்

ததை வெளியில் யாருக்கும் தெரிவிக்காமல் இருக்கும்படி அக் கன்னிகைகளைப் பப்பா வேண்டிக்கொண்டிருந்தபோதிலும் இது எப்படியோ அத் தகப்பனுக்குத் தெரிந்துவிட்டது. தனக்கு என்ன நேரிடுமோ என்று பயந்து உடனே பப்பா அருகிலுள்ள மலைகாட்டிற்கு ஓடிப்போய் அங்கேயுள்ள மலையாளிகளுள் முக்கியஸ்தர்களான பலேவன் தேவன் என்னும் இருவனரயும் சிநேகித்துக்கொண்டான். இவ்விருவரும் பப்பாவை அதிக விசுவாஸத்துடன் காத்துவந்ததோடு பலேவன் தன் கைவிரல் ரத்தத்தையே எடுத்து அவனுடைய நெற்றியில் ராஜதிலக மிட்டான். பின்னல் பப்பா அதே ராஜபுத்ரியை மணஞ்செய்துகொண்டதோடுகூட அக் கன்னிகைகள் எல்லாரையும் சேர்த்துக்கொள்ள வேண்டியதாயிற்று. காட்டில் மாமரத்தடியில் நடந்த விளையாட்டு விவாகத்தினல் உண்டான வம்ச வளர்ச்சியைப் பப்பாவின் சந்ததியார் இன்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

அப்போது சித்தூரில் ஒரு பிரமர ராஜபுத்ரன் அரசுபுரிந்துகொண் டிருப்பதாகக் கேள்விப்பட்டு, தன் தாயார் ஒரு பிரமர ராஜபுத்ரி யானதால், அதன் பொருட்டு அவ்வரசன் தனக்கு அனுகூலமாயிருக்கலாம் என்று நினைத்து, பப்பா சித்தூருக்குப் போகத் தீர்மானித்தான். நினைத்தபடியே இவனுக்கு அவ்வூரில் பக்ஷமாயும் மிக்க மரியாதையோடும் நல்வரவளிக்கப்பட்டது. அவ்வரசன் இவனுக்கு ஒரு பெரிய ஜாகீர் கொடுத்து இவனைத் தன் கீழுள்ள ராணுவத் தலைவருள் ஒருவனயும் நியமித்தான். இதைக் கேட்ட மற்ற ராணுவ ஜாகீர்தார்க ளனைவரும் பப்பாவினிடத்தில் அசூயைகொண்டு தங்கள் அரசனையும்

வெறுத்தார்கள். கொஞ்சக் காலத்திற்கெல்லாம் அன்னிய சத்துரு ஒருவன் சித்தூரை எதிர்த்து வந்த போது இவர்கள் தங்கள் அரசனுக்கு உதவிபுரிய முடியாதென்றும் புதிதாய் வந்த பப்பாவைக் கொண்டே அரசன் தன் நகரத்தைக்காத்துக்கொள்ளவேண்டு மென்றும் சொல்லிவிட்டார்கள். உடனே அவ்வர சன் இவர்களுடைய ஜாகீர்களை யெல்லாம் பிடுங்கிக் கொண்டு பப்பாவைச் சேனாதிபதியாக்கி அவனையே போருக் கனுப்பினான். பப்பா போருக்கு வெகு தைரியமாய்ச் செல்வதை நோக்கி, ஒதுங்கி நின்ற இம் மேன்மக்கள் அனைவரும் ஆபத்துக் காலத்தில் அரசனைக் காட்டிக்கொடுத்ததை நினைத்து வெட்க மடைந்து தங்களுடைய ஜாகீர் போனபோதிலும் தாங்களும் பப்பாவோடு சேர்ந்து எதிரியை நகரி லின்றும் ஒட்டப் புறப்பட்டார்கள். பப்பா வெகு சாமர்த்தியமாய்ப் போர் புரிவதைக் கண்டு சந்தோ ஷமடைந்து அம் மேன்மக்கள் எல்லோரும் அவனைச் சாமான்யனல்லன் என்று தெரிந்து கொண்டதோடு அவனை அதிக மரியாதையுடன் உபசரிக்கத் தொடங் கினார்கள். போர் முடிந்து எதிரிகளும் தோல்வி யடைந்து ஓடிப்போனபிறகு இம் மேன்மக்கள் தங்கள் அரசனை வெறுத்து, தாங்கள் ஒப்புக்கொண்டபடி சித்தூருக்குள் புகாமல் பன்னிரண்டு மாதகாலம் வெளியே இருந்து விட்டு, பிறகு திடீரென்று ஊருள் புகுந்து அரசனையும் ஒட்டி விட்டார்கள். உடனே அவர்கள் பப்பாவையே அழைத்து அவனைச் சித்தூ ருக்கு அரசனாக்கினார்கள்.

சித்தூர் ராணாவாக்கப்பட்ட பின்பு, பப்பா அந் நிய தேசத்தினருள்ளும் சில மனைவியர்களைக் கொண்

டானென்றும், இவனுக்கு இருநூற்றைம்பத்தைந்து பிள்ளைகள் பிறந்தனர் என்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் கி. பி. 713 ம் வருஷத்தில் சித்தூரை எதிர்த்து வந்த அன்னிய அரசன் முகம்மத் பின் காஸிம் என்பதற்கும் அவனைத் தோற்கடித்துத் துரத்திய சேனாதிபதி பப்பாதான் என்பதற்கும் சந்தேகமில்லை.



## 2. பிருதிவிராஜனும், ஸமரஸிங் ராணுவும்.



பப்பா முதற்கொண்டு சித்தூரில் அரசுபுரிந்து வந்தவர் அனைவரும் கனகசேனன் வம்சத்தினரே. அவர்களுள் முதன்முதல் கீர்த்தி பெற்றவன் கோமான் என்பவன். மீவாரதேசத்தில் மிகவும் புராதன காவியமாகிய 'கோமான் ரஸா' வில் புகழப்பட்டுள்ளவன் இவனே. பேர்போன ஹாரூன் அல் ராஷீத்தின் குமாரனான மாமூன் என்பவனுடைய தலைமையின் கீழ் வந்த முகம்மதியர்களால் சித்தூர் இரண்டாந்தரம் தாக்கப்பட்டபோது, ராஜபுதனத்திலுள்ள அரசர்களுக்கெல்லாம் கோமானே தலைமை வகித்து எதிரிகளை முறியடித்ததோடு அவர்களுடைய சேனாதிபதியையும் கடைசியாகச் சிறைப்படுத்தினான். கோமான் என்ற சொல்லிற்கே வீரத்தன்மை யென்னும் பொருள் உண்டாகும்படி அவ்வளவு சாமர்த்தியத்துடன் விளங்கினான். இவனுக்குப் பின் ஆண்ட பதினைந்து அரசருள், சரித்திரத்தில் விசேஷமாய்க் குறிப்பிடத் தக்கார் யாரும் இலர். பதினாறுவது ஸமரஸிங் என்பவனுடைய ஆட்சியின் தொடக்கத்தில் ராஜபுதனத்திலுள்ள நாடுகளெல்லாம் நாநாவிதத்தில் சீர்குலைந்து

முகம்மதிய அன்னியருக்கு உட்பட்டுவிடும்படியான கேவல ஸ்திதியில் இருந்தன.

சந்திர குலத்தில் தோன்றிய பாண்டுவின் புத்திரரான யுதிஷ்டிர மகாராஜாவால் கட்டப்பட்ட இந்த்ரப்ரஸ்தமே டில்லி என்று வழங்கப்பட்டு, அவர் சந்ததியாரே தலைமுறை தலைமுறையாய் டில்லி ராஜ்யத்தை ஆண்டுவந்தார்கள். கடைசியில் அநங்க பாலன் என்பவனுக்குப் புத்திரன் இல்லாமற் போகவே, அவன் ஆஜ்மீரில் ஆண்டுவந்த அக்கினிகுல அரசனுடைய மகனும் தனது பௌத்திரனுமாகிய பிருதிவி ராஜனிடம் டில்லியை ஒப்புவித்து, தான் சிம்மாசனத்தினின்றும் நீங்கினன். கனோஜில் ஆண்டு வந்த சூரிய குல அரசன் மகனாகிய ஜயசந்திரனும் அனங்கபாலனுக்கு ஒரு பௌத்திரனானபடியால், இவனுக்கு டில்லியைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. இதனாலேயே ஜயசந்திரன் பிருதிவிராஜன் மீது வெறுப்புக்கொண்டான். இந்த வெறுப்புத்தான் கடைசியில் ராஜபுதனத்திற்கே ஒரு பெரிய நெருப்பாய் வளர்ந்துவிட்டது. ஏனென்றால் ஜயசந்திரன் பிருதிவிராஜனைத் தொலைப்பதற்கு மிக இழிவான ஒரு வழியைத் தேடினன். அதாவது, பரத கண்டத்திற் கப்பாலுள்ள கஜினி என்னும் முகம்மதிய நாட்டில் அரசுபுரிந்துவரும் டார்ட்டாரிய அரசனைத் தனக்குத் துணையாக அழைத்தான். ஷஹாபுடீன் என்னும் அவ்வரசன் ஒரு பெரிய சேனையை அனுப்பினன். ஒரு ராஜபுத்ரனே, மற்றொரு ராஜபுத்ரனை எதிர்க்கத் தனது நெருங்கிய உறவை மறந்தபோதிலும், தன் ஜாதி மதத்தைத் துறந்து, தேச நன்மையையும் மறந்து, தன்னுடைய க்ஷேமத்தையுமே சற்றும் கவனியாமல்

அன்னியதேசத்தினனும் அன்னியமதத்தினனுமாகிய அரசனை அழைத்த பொழுது, அவன் இவனுடைய வேண்டுகோளுக்கு உடனே இசைந்தது வியப்பாகாது. இந்திய தேசத்தின் மீதே கண்ணாயிருந்த முகம்மதிய அரசனுக்கு இது ஒரு நல்ல சமயமல்லவா? இந்தச் சாக்கில் வந்துதானே இந்தியாவைக் கைக்கொள்ள வேண்டும்.

இந்தச் சமயத்தில் சித்தூர் ராஜாவாகிய ஸமரஸிங்குக்கு பிருதிவிராஜா ஒரு தூதனுப்பினான். பிருதிவிராஜனின் சகோதரியை ஸமரஸிங்குக்கு மணஞ்செய்து கொடுத்த சொற்ப காலத்திற்கெல்லாம் இச்சம்பவம் நேர்ந்தது. ஸமரஸிங் பிருதிவிராஜனின் உதவிக்குச் சென்றது இதன் பொருட்டாக மாத்திரம் அன்று. ராஜபுதனத்தில் தோன்றிய இந்த விபரீத விளைவாகிய ஜயசந்திரனை யார்தான் வெறுக்க மாட்டார்கள். ஸமரஸிங் நேராகக் கஜினியிலிருந்து வரும் சேனைகளை எதிர்த்துச் சென்றான். இதற்குள் ஜயசந்திரனை எதிர்த்துப் பிருதிவிராஜன் தானே நேராகச் சென்று அவனைத் தோற்கடித்தான். உடனே பிருதிவி ராஜனும் ஸமரஸிங்குடன் போய்ச் சேர்ந்து, இருவருமாக முகம்மதிய சேனைகள் முழுவதையும் முறியடித்து அவர்கள் தலைவனையும் சிறைகொண்டு மீண்டார்கள்.

தன் சேனைக்கு நேர்ந்ததைக் கேட்ட ஷஹாபுடீன் வெகு கோபங்கொண்டு சில வருஷங்களுக்குள் தானே தன் சேனைகளை முன்னிட்டுக்கொண்டு ராஜபுத்ர ராஜ்யங்களின்மீது படையெடுத்து வந்தான். பிருதிவி ராஜனும் ஸமரஸிங்கும் தங்கள் சேனைகளுடன் டில்லியிலிருந்து புறப்பட்டுப்போய் ஒரு மைலுக்கப்பால் முகம்மதிய சேனைகளைச் சந்தித்தார்கள்.

குகலோதிய அரசனுகிய ஸமரஸிங்கின் வீரத் தன்மையும், அவன் வெகு ஸாமர்த்தியமாய்ப் போர் புரிந்ததும் மீவார தேச ராஜபுத்ர கவிஞரால் இன்றும் பாடப்பட்டு வருகின்றது. இருந்தபோதிலும் ராஜ புத்ர சாமர்த்தியம் ஒன்றும் இந்த யுத்தத்தில் கடைசியாகப் பலன்படவில்லை. ஸமரஸிங்கோடு அவனது 1300 வீரர்களும் மடிந்துவிட்டனர். டில்லியில் அவனுடைய அருமைக் காதலியாகிய பிருதை ஒவ்வொரு நிமிஷமும் போர்க்களத்தினின்று வரும் செய்தியை எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள். டில்லியிலிருந்தும் சித்தூரிலிருந்தும் சென்ற வீரர்களெல்லாம் மடிந்து போயினர் என்பதும், தன் சகோதரனை முகம்மதியர்கள் சிறைப்படுத்தினர் என்பதும், தன் கணவனும் போர்க்களத்திலேயே மாண்டு போயினன் என்பதும் அவள் காதில் விழுந்தவுடனே போய், உண்மை ராஜ புத்ரியாகவே அக்கினிப் பிரவேசம் செய்து தன் காதலனைச் சேர்ந்துகொண்டாள்.

இதற்குள் ஷஹாபுடீனுடைய சேனைகள் டில்லியில் புகுந்து அந்நகர் முழுவதையும் கொள்ளையிட்டன. இதை யெல்லாம் கண்டு களித்துக்கொண்டிருந்த ஜயசந்திரனே இதே கதிதான் தனக்கும் நேரிடும் என்பதை இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. டில்லி விழுந்ததும் முகம்மதியர்கள் காலதாமத மில்லாமல் உடனே இந்த ஜயசந்திரன் மீதே திரும்பிக் கனோஜ் நகரத்தில் புகுந்து கொள்ளையிட்டார்கள். அநேக ராஜ புத்ர நகரங்கள் ஒன்றன் பின் ஒன்றாக இந்தக் கதியையே அடைந்தன. எங்குப் பார்த்தாலும் கொள்ளையும், சூறையும், கொலையுமே தென்பட்டன. எங்கே திரும்பினாலும் ரத்தமயமா யிருந்தது. அநேக

குடும்பங்கள் பூண்டோடு தொலைந்தன. இதற்கெல்லாம் மூலகாரணமா யிருந்த துரோகி ஜயசந்திரனும் கங்காநதியில் தானாகவே விழுந்து மடிந்தான்.

ஸமரஸிங்குக்குப் பிறகு சித்தூரில் ஆண்ட பத்து அரசர்களில் ரகுபதி என்னும் ராணுவைப்பற்றி மாத்திரம் இங்கே குறிப்பிடலாம். இவன் கி. பி. 1201 ம் வருஷத்தில் பட்டத்திற்கு வந்ததும் மாண்டார நாட்டின்மீது படையெடுத்துச் சென்று அதை வசப்படுத்திக்கொண்டான். சிஸோதா என்னும் பட்டணத்தைக் கட்டினவனும் இவனே. இதுபற்றியே மீவார நாட்டு ராஜபுத்ரர் சிஸோதயர் எனப்படுவர். மற்ற ஒன்பது அரசர்களும் கயா என்னும் புண்ணிய ஸ்தலத்தை அன்னியர் வசமிருந்து மீட்டுக்கொள்ளுவதற்காக யுத்தம் புரிந்து போர்க்களத்திலேயே மாண்டனர்.



## 3. பத்மினி.



1274ம் வருஷத்தில் லக்ஷ்மணஸிங் என்பவன் சித்தூர் ராணுவானன். அப்போது அவனுக்குத் தக்க பிராயம் வராமையால் அவனுடைய மாமனாகிய பீமஸிங் ராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டுவந்தான். அப்போது ராஜபுதனத்திலுள்ள நகரங்களுள் சித்தூரே மிகவும் பிரசித்தி யடைந்திருந்தது. செல்வமேயன்றி மற்றெந்த வளப்பமும் சித்தூரிலேயே குடிகொண் டிருந்தாற் போலிருந்தது அக்காலத்தில் இந்தியருக்குத் தெரிந்த சித்திர வேலைத்திறம் அனைத்தும் அவ்வூர்க்

கட்டடங்களில் காணலாம். செயற்கை யழகு வாய்ந்த இவ்வளவு நேர்த்தியான நகரத்தைக் கைக்கொண்டு கொதிபெறவேண்டு மென்பதைவிட, அந் நகரத்தில் இயற்கை யழகே உருவெடுத்து வந்தாற்போல் விளங்கி நின்ற ஒரு பொருள்தான் பட்டாணியரசனாகிய அல்லாவுதின் மனத்தைக் கவர்ந்தது. பீமஸிங்கின் உயிர்க் காதலியான பத்மினியைப் பார்த்து வந்தவர்கள் அவளுடைய அழகைப்பற்றி வர்ணிப்பதைக் கேட்ட நாள் முதல், அல்லாவுதின் அவளை எவ்விதத்தினாலாவது கைபபற்றிக் கொள்ளவேண்டுமென்ற துராசை கொண்டவனாகி, கூடிய சீக்கிரத்தில் தனது ஸைன்யங்களைச் சேர்த்துக்கொண்டு போர்க்கோலம் பூண்டு நேராகச் சித்தூருக்கு முன்னால் வந்து தோன்றினான். வெகு பலமான அந்தச் சித்தூர்க் கோட்டைக்குள் இருந்த ராஜபுத்ர ஸைன்யங்கள் மிகுந்த தைரியத்துடன் முகம்மதியர்களின் முற்றுகையைத் தாக்கி நின்றார்கள். இவ்வாறு அநேக நாள் பலனில்லாமல் கழியவே, அல்லாவுதீன் தனது அந்தரங்கம் இன்னதென்று ராஜபுத்ரர்களுக்குப் பகிரங்கமாய்த் தெரிவித்து அவர்கள் பத்மினியைக் கொண்டுவந்து தன்னிடத்தில் ஒப்புவித்த க்ஷணமே சித்தூர் முற்றுகையை நிறுத்தி விடுவதாகச் சொன்னான். எவ்வித பலாத்காரமும் மத்யஸ்தமும் பலிக்காமற் போகவே, அப் பட்டாணிக் கபடி தனது வேண்டுகோளில் ஒரு படி தணிந்து, அந்த ரூபவதியைத் தன் கண்ணால் நேராக ஒருதரம் பார்க்கமாத்திரம் இடங்கொடுத்தால் போதுமென்றும், அதுவும் இல்லை யென்றால், பல கண்ணாடிகளைக்கொண்டு பிரதிபிம்பிக்கப்பட்ட அவளது ரூபத்தையாகிலும் காண்பித்தால் போது

மென்றும் சொல்லியனுப்பினன். ராஜபுத்ரர் இந்த நிபந்தனைகளைச் சற்று ஆலோசித்துப் பார்த்து அப் பட்டாணியினுடைய வாக்கை நம்பி, அவள் ரூபத்தைப் பிரதிபிம்பித்துக் காட்ட இசைந்தனர். ஆசை வெட்கமறியாததோடு கூடப் பயமும் அறியாதாகை யால், அல்லாவுதீன் தன்னுடைய சேனைகளை வெளியே நிறுத்திவிட்டு, தன் மெய்காவலரும் இல்லாமல் தனியாகக் கோட்டைக்குள் நுழைந்தான். ஒரு விதமாகச் சமாதானத்திற்கு வருவதற்காக ஒருவரை யொருவர் நம்பிய இவ்விரு கக்ஷியாருள் யார் யாரை வஞ்சித்தார் என்பது பின்னல் விளங்கும். அல்லாவுதீனைத் தக்க மரியாதையுடன் ராஜபுத்ரர்கள் உள்ளே அழைத்துக் கொண்டுபோய்த் தங்கள் வாக்கை நிறைவேற்றினர் கள். அவனும் அமைதியாய் திரும்பிப் போகும் போது அவனைக் கௌரவப்படுத்துவதற்காகப் பீமஸிங்கும் அவன் கூடவே கோட்டைக் கப்பாற் சென்று வழி விடுவதற்காகப் போனன். இதை எதிர் பார்த்துத்தான் அப் பட்டாணி கோட்டைக்கருகில் தனது ஆட்களுள் சிலரை மறைந்திருக்கும்படி ஏற் படுத்தியிருந்தான். இவ்விருவரும் கோட்டையைத் தாண்டினவுடனே அவ்வாட்கள் பீமஸிங்கின் மீது பாய்ந்து அவனைக் கொண்டுபோய்ச் சிறைப்படுத்தி விட்டார்கள்.

அல்லாவுதீன் தனது முகாமுக்குச் சென்றதும் பீமஸிங்குக்கு விடுதலை வேண்டுமென்றல் அவனுக் குப் பதிலாகப் பத்மினியைத் தரவேண்டுமென்று ராஜ புத்ரர்களுக்குச் செய்தி யனுப்பினன். பீமஸிங்குக்கு நேர்ந்த இந்த விபத்தைக் கேட்டுச் சித்தூரார் எல்லா ரும் மிகவும் துக்கப்பட்டார்கள். பத்மினியோ தனது

மானத்தைக் காக்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டு உடனே டார்ட்டாரிய முகாமுக்குப் போக வேண்டுமென்றாள்.

அப்பொழுது அவளுடைய மாமனாகிய கோரா வும், மருமகனாகிய படாலும் அவளது உயிரையும் மானத்தையும் காப்பதோடுகூடப் பீமஸிங்கையும் மீட்டுவரக்கூடிய ஓர் உபாயத்தை ஆலோசித்துச்செய் தார்கள். போர்க்களத்தை விட்டு முகம்மதியர் தங் கள் முகாமுக்குச் செல்லும் தினத்தில்தான் பத்மினி யைக் கொண்டுவந்து விட முடியுமென்றும், ஆனால் அவளுடைய உயர்ந்த பதவிக்குத் தகுந்தபடி ஸ்த்ரீ பந்துக்களையும் தாதிமார்களையும் சேர்த்துத்தான் அவளை அனுப்பவேண்டிய தாகையால், அந்த ஸ்திரீ பரிவாரங்களின் ஏகாந்தம் கெடாமலிருக்கும்படி பந் தோபஸ்து ஏற்பாடுகள் செய்துவைக்கும்படி வெகு கண்டிப்பாய்த் தனது ஆட்களுக்குக் கட்டளையிட வேண்டுமென்றும் அல்லாவுதினுக்குச் சொல்லியனுப் பினார்கள்.

பத்மினியையே தியானம் செய்துகொண்டிருந்த அந்த டார்ட்டாரியன் இதைக் கேட்டதும் தனது மனோரதம் நிறைவேறும் காலம் வந்துவிட்டதென்று நினைத்து உடல் பூரித்தான். அவன் அந் நிபந்தனை களுக்கெல்லாம் உடன்பட்டு அவர்கள் வேண்டிய படியே பந்தோபஸ்துகள் ஏற்படுத்தும்படியாக உத் தரவு பிறப்பித்தான். குறித்த தினத்தில் சித்தூரிலிரு ந்து எழுநூறு பல்லக்குகள் டார்ட்டாரிய முகாமுக்கு வந்து சேர்ந்தன. ஒவ்வொரு பல்லக்கிலும் ஒரு சிற ந்த போர்வீரனை ஆயுதபாணியாய் உட்காரவைத்து, ஆறு ஆறு சிப்பாய்கள் பல்லக்குத் தூக்குபவர்போல

வேஷந்தரித்து, முகம்மதிய முகாமுக்கு நடுவிலேயே நேராகக் கொண்டுபோய்த் தகுந்த மறைப்புக்களுடன் இறக்கினார்கள். பத்மினி பீமஸிங்கைப் பார்த்து விட்டு வருவதற்காக அரைமணி நேரம் அவகாசம் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு நிமிஷமும் பத்மினியின் ஞாபகமே அல்லாவுதீனுடைய ஊனையும் உயிரையும் உருக்கிக்கொண் டிருந்தது.

காலதாமதமின்றிக் காரியங்களை ஏற்படுத்த வேண்டுமென்ற கட்டளை அந்த டார்ட்டாரியன் வாயினின்று வருமுன்னமே, பல்லக்குகளில் இருந்தவர்களும் அவர்களைத் தூக்கி வந்தவர்களும் தங்களுடைய நிஜ ரூபத்திலேயே ஆயுதபாணிகளாகத் தோன்றினார்கள். அப்பொழுது முகாமில் உண்டாகிய சந்தடியில் பீமஸிங் தன்னுடைய அடைப்பிலிருந்து தப்பியோடி, தயாராயிருந்த ஒரு குதிரையின் மீதேறி நேராகச் சித்தூருக்கே ஸவாரி செய்தான். அவனைக் காக்கும் பொருட்டுச் சில ராஜபுத்ர வீரர்கள் கூடவே ஸவாரி செய்து கொண்டுபோய், தங்களைத் துரத்திவரும் முகம்மதியர்களை இடை யிடையே தடுத்துக்கொண்டு வந்ததில் ஒருவர் பின் ஒருவராய் விழுந்து மடிந்தனர்.

இங்ஙனம் தங்கள் எஜமானரைக் காத்தற்பொருட்டு உயிரையே கொடுத்த வீரர்களின் பேருதவியால், தன் காலடியிலேயே முகம்மதியர் தொடர்ந்து வந்தும், பீமஸிங் க்ஷேமமாய்ச் சித்தூர்க் கோட்டைக்குள் வந்து சேர்ந்தான்.

முகாமில் நடந்த பிரமாதமான சண்டையில் ராஜபுத்ர வீரர்க ளெல்லாம் சத்துருக்களில் அநேகரைத் தங்கள் வாளுக்கு இரையாக்கி விட்டுத் தாங்களும் மாண்டனர். கோராவும் கொல்லப்பட்டார். டார்ட்

டாரியனும் எஞ்சிய சேனையுடன் வந்த வழியைப் பார்த்து ஓட்டம் பிடித்தான். இங்ஙனம் ஒரு ராஜ புத்ரியின் மானத்தைக் காக்கவல்லவோ இம் மகா வீரர்கள் எல்லோரும் ஒருங்கே தங்கள் உயிரைக் கொடுத்தனர்.

போர்க்களத்தி லிருந்து வருபவர்களை எதிர் பார்த்துக் கொண்டிருந்த கோராவின் மனைவி தனது நாயகனது வீரத்தன்மையால் சத்துருக்களில் அநேகர் மடிந்து போனதையும் அவன் களத்திலேயே இப் பூத உடம்பைத் தள்ளிவிட்டுப் புகழுடம்போடு வீர சுவர்க்கம் சென்றதையும் காதாரக் கேட்டு, 'என் நாதனைச் சேர்ந்துகொள்ள இனித் தாமதிக்கக் கூடாது' என்று சொல்லிக்கொண்டே அக்கினிப் பிர வேசம் செய்துவிட்டாள்.

பின்னர்ப் பல வருஷங்களுக்குப் பிறகு, லக்ஷ்மண ஸிங்குக்குத் தகுந்த பிராயம் வந்ததும் தானே அர சாட்சியை ஒப்புக்கொண்டு ஆண்டுவருங்காலத்தில், அதே பட்டாணிய அல்லாவுதீன் முன்னிலும் பதின் மடங்கு பலத்த ஸைன்யத்துடன் சித்தூரின்மீது படையெடுத்து வந்தான். வெகு மும்முரமாய்ப் போர் நடந்து கொண்டிருக்க, ஒருநாள் இரவில் மகாராணு லக்ஷ்மணஸிங் தனது பன்னிரண்டு புத்திரர்களில் ஒரு வனையாவது தப்புவித்துத் தனது வம்சத்தைக் காக்க வேண்டுமென்று மிக்க கவலையோடு ஆலோசித்துக் கொண்டிருக்கையில், திடீரென்று 'எனக்குப் பசிக்கி றதே' என்ற சப்தம் அவர் காதில் விழுந்தது. உடனே அவர் நிமிர்ந்து சித்தூர் நகரதேவதையின் கம்பீரமான தோற்றத்தைக் கண்ணுற்று, "இது வரையில் எனது எண்ணாயிரம் ஜனங்களைக் கொடுத்

திருந்தும் இன்னும் திருப்தி இல்லையோ, தாயே" என, "எனக்கு ராஜபலி வேண்டும், முடிசூட்டஇருக்கும் உங்களில் பன்னிருவர் போர்க்களத்தில் மாளாவிடின் சித்தூர் அந்நியர் கைவசப்படும்" என்ற பதில் தான் கிடைத்தது.

மறுநாட் காலையில் ஸமஸ்தான பிரபுக்களிடம் இதைத் தெரிவித்ததும் அவர்கள் அது அரசனது மனக்கலக்கத்தினுல் உண்டான கனவே யன்றி வேறன்று என்று சாதித்தார்கள். மறுநாள் நடுராத்திரியிலும் அதே தோற்றம் காணப்பட்டது; அவ்வித வாக்கே கேட்கப்பட்டது. ஆகவேதான் கடைசியிலும் நிறைவேறியது.

அப் பன்னிரு வீர சகோதரர்கள் இதைக் கேட்டுச் சற்றும் மனந் தளராதவர்களாய் ஒவ்வொருவரும் தான் தான் முன்னே செல்லவேண்டுமெனப் பேசிக்கொண் டிருந்தான். ஆர்ஸிங் மூத்தவனாதலால் தன்னை முதலில் யுத்தத்திற்குப் போகவிடவேண்டுமென, அப்படியே எல்லாரும் அதற்கிசைந்தார்கள். அடுத்தவனுகிய அஜேஸிங் முன் வந்தபோது அரசன் இவ் வருமைப் புதல்வனைக் காப்பாற்றிவைத்து வம்ச வளர்ச்சியைத் தேட விருப்பமுள்ளவனு யிருப்பதைத் தெரிவிக்கவே அவனும் ஒப்புக்கொண்டான். மற்றச் சகோதரர்கள் எல்லாரும் ஒருவன் பின் ஒருவனுக யுத்த களத்திற்குச் சென்று மாண்டனர். தகப்பன் சொற்படிக்கு அஜேஸிங் சில ராஜபுத்ரர்களுடன் சித்தூரினின்றும் தப்பியோடி கைல்வாராவுக்குப் போய் அடைக்கலம் புகுந்திருந்தான்.

2

கிற்க. சித்தூரில் அதே சமயத்தில் நடந்த மற்ருெரு சங்கதி இன்னும் மனத்தை உருக்கத்தக்கது. பூமிக்குள் வெகுதூரம் வரையில் பகலவனுக்குப் புலப்படாத பல ரகசிய அறைகள் வெட்டப்பட்டு அவைகளுள் அக்கினி பகவான் வெகு திவ்யமாய் ஜ்வலித்துக் கொண்டிருக்க ஆயிரக்கணக்கான ராஜபுத்ரிகள் வரிசை வரிசையாக உள்ளே நுழைந்தார்கள். அதிரூபவதியான பத்மினி கடைசியாக உள்ளே சென்றதும் பாசறைகளின் கதவுகள் அடைக்கப்பட்டன.

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்."

அவ்வுத்தம ஸ்த்ரீகள் இங்ஙனம் அக்கினி தேவதையிடத்துச் சரண் புகுந்து தங்கள் மானத்தைக் காத்துக்கொண்டார்கள்!

பின்பு மகாராணுவும் ஏனையோரும் கோட்டைக் கதவுகளைத் திறந்துகொண்டு சத்துருக்களின்மேல் பாய்ந்து கடைசிவரையில் போர் புரிந்தே மாண்டனர். இந்த டார்ட்டாரிய படையேற்றம் சூறைக்காற்றையும் புயற்காற்றையும்போல ராஜபுதன முழுவதும் ஒரே நாசமாகும்படி செய்தது. கோட்டைகளும் மதில்களும் இடிந்து வீழ்ந்தன. கிராமங்களெல்லாம் பறந்துபோயின. வயல்களெல்லாம் தொம்சமாயின. வீழ்த்தப்பட்ட அநேக ராஜவம்சங்களில் அக்கினிகுல ராஜபுத்ர வம்சமே பூண்டோடு அற்றுப்போயிற்று. அல்லாவுதீன் சித்தூரில் சில நாள் தங்கியிருந்து அவ்வளவு நாசத்துக்கும் காரணமான தன்னைத் தானே மெச்சிக்கொண்டு, தனது மூர்க்கமும் கொடுமையும் எவ்வளவு தூரம் செல்

ஹமோ அவ்வளவு தூரம் அவைகளுக்கு இடங் கொடுத்தான். பின்பு தான் ஜயித்த ராஜபுத்ரச் சிற்றரசர்களுள் ஒருவனுகிய மால்தேவன் என்பவனிடம் சித்தூரை ஒப்புவித்து விட்டுச் சென்றுன்.

இதுதான் சரித்திரத்தில் சித்தூரின் முதலாவது நாசம் என்று வழங்குவது. இன்றும் ராஜபுத்ரர் 'சித்தூர் நசித்த பாபம்' என்று தங்கள் பேச்சு வழக்கில் ஆணையிடுவதைக் கேட்கலாம்.



## 4. ராணு ஹமீர்



ஹாராவளி மலைப்பாங்குகளின் இடையிடையே விரிந்துள்ள பள்ளங்களுள் மிகவும் விசாலமான சேரானல்லா என்னும் பள்ளத்தாக்கின் மேட்டில் கட்டப்பட்டுள்ள கைல்வாரா என்னும் பட்டணத்தில், ராணு அஜேஸிங் தப்பியோடிவந்த சில ராஜபுத்ரர்களோடும் பத்திரமாய் வசித்துவந்தான். வந்த இடத்திலும் அமைதியாயிருக்க முடியவில்லை. ஏனென்றுல், அம் மலையாளிகளின் தலைவர் அநேகர் ஸதா கைல்வாராவின்மீது படையெடுத்து வருவதும் துரத்தப்படுவதுமாக இருந்தது. அவர்களுள் முஞ்சன் என்பவன் ஒரு தரம் வந்து ராணுவை எதிர்த்து அவன் தலையிலும் காயப்படுத்திவிட்டான். அவனுடைய இரண்டு பிள்ளைகளுக்கும் பதினுறு வயதுக்குமேல் ஆனபோதிலும் ஒருவனுக்காவது முஞ்சனுக்கு வரும் குறிகள் இல்லை. ஆனுல் அவர்களுடன் வளர்ந்து வரும் ஹமீர் என்னும் வாலிபன் மாத்திரம் வெகு

மிடுக்காய்த் திரிவதையும் துடுக்கான காரியங்களைச் சாதிப்பதையும் பார்த்து ராணு அடிக்கடி சந்தோஷப் படுவான். தனது மூத்தபிள்ளையாகிய ஆர்ஸிங்கின் குமாரனை இந்த ஹமீருக்கே முடிசூட்டவேண்டு மென்ற தன் பிதாவினுடைய கோரிக்கையும் அவனுக்கு ஞாபகம் உண்டு.

ஒரு நாள் முஞ்சனின் உபத்திரவத்தைக்குறித்து ஆலோசித்துக்கொண் டிருக்கையில் ஹமீர் அவன் முன்வந்து நின்று, 'இந்த முஞ்சனைத் தேடிப் பிடித்து அவனை வென்றாலல்லது நான் திரும்பி வருகிறதில்லை' என்று சபதம் செய்துவிட்டு வெளிக்கிளம்பினன். சில நாளைக்கெல்லாம் முஞ்சனின் சிரத்தைத் தனது வில் நுனியில் மாட்டிக்கொண்டு தனது சிற்றப்பன் காலின்கீழ் அதை வணக்கத்தோடு சமர்ப்பித்து, "தங்களுடைய சத்துருவின் சிரம்! இதை அங்கீகரிக்க வேண்டும்" என்றான்.

ஹமீருக்குத்தான் முடிசூட்ட வேண்டு மென்பதற்கு இதுவே போதும். அந்த க்ஷணமே அஜேஸிங் அந்தச் சிரத்திலிருந்த ரத்தத்தையே எடுத்து ஹமீரின் நெற்றியில் ராஜதிலக மிட்டான். ராணுவின் முதற்குமாரன் கைல்வாராவிலேயே இருந்து காலங் கழித்தான். இளையவன் தக்ஷிணத்திற்குப் போய் வசித்ததாகவும் அவன் ஸந்ததியில் தோன்றியவர்களே சரித்திரத்தில் பிற்காலத்துப் பெயர்பெற்ற சிவாஜியின் முன்னேர்களானர்களென்றும் தெரியவருகிறது.

மகுடாபிஷேக காலத்தில் ராஜ புத்ரர்களால் அனுஷ்டிக்கப்பட்டுவரும் வழக்கங்களுள் ஒன்று இங்கே குறிப்பிடத் தகுந்தது. ராஜரீகம் பூண்ட மறு

நாட் காலையில் அரசன் தனது பரிவாரத்துடன் புறப் பட்டுத் தனக்கு எதிரி யாராவது இருந்தால் அவனது நாட்டின்மீது படையெடுத்துச் செல்லுவதுண்டு. அப்படிச் செல்லுதற்கு எதிரி யாரும் தனக்கில்லாம லிருந்தால் ஒரு போலிப்படை யெழுச்சியாவது நடத் தப்படும். இவ் வழக்கத்தை யனுஸரித்து ஹமீர் தனது விரோதியான முஞ்சனின் நாட்டின்மீது பாய்ந்து அதன் கோட்டைகளைப் பிடித்துக்கொண் டான். இதனையே அவன் பின்னால் அடைய இருந்த ஜயத்திற்கு ஒரு நற்சகுனமாகக் கொள்ளலாம்

இந்த ராஜபுத்ர வீரனுக்குத் தனது பிதிரார்ஜித மான சித்தூரை எப்படியாவது கைக்கொள்ளவேண்டு மென்ற ஆசை உண்டானது ஆச்சரியமன்று. அடிக் கடி சமவெளி நாடுகளின்மீது படையெடுத்துச் செல்லவும் ஓடி ஒளிந்துகொள்ளவும் மலைப்பிரதேசங் களின் இடையேயுள்ள கைல்வாரா என்னும் தலைநக ரமே மிகவும் சௌகரியமா யிருந்தது அங்கிருந்து அடிக்கடி ஹமீரின் ஸைந்யங்கள் குபீர் குபீரென்று கிளம்பிச் சுற்றுப்பிரதேசங்களிலுள்ள கிராமங்களை யும் வயல்களையும் தொம்சப்படுத்திக்கொண்டு இருந் தன. பின்பு, பட்டாணி யரசனுக்குக் கப்பங் கட்டி வரும் மால்தேவனின் அரசாட்சிக் குட்பட்ட சித்தூர் நாட்டார் எல்லோரும் தங்களது வாசஸ்தலத்தை விட்டு மலைப்பிரதேசங்களுட் சென்று பிழைக்கவேண் டும், இல்லையாயின் அவர்கள் ஹமீரின் விரோதிக ளாகக் கருதப்படுவார்கள் என்று அந்தப் பிரஜைக ளுக்கெல்லாம் தெரிவிக்கப்பட்டது.

இப்படி இடைவிடாது உபத்திரவஞ் செய்யும் ஹமீரை ஒரு வழியாய் அடக்கவேண்டுமென்ற எண்

த்துடன் அவனுக்கு ஒரு தக்க ராஜபுத்ரியை விவாகம்செய்து கொடுப்பதாக மால்தேவனிடமிருந்து ஒரு பிரேரபணை வந்தது. ராஜபுத்ரர்களுக்குள் விவாகத்தை நிச்சயித்தற்காக ஏற்பட்ட வழக்கம் ஒன்றுண்டு. அதாவது பெண்ணைக் கொடுக்க உத்தேசித்தவர்கள் ஒரு தேங்காயைக் கொடுத்தனுப்புவார்கள். அத்தேங்காயை அங்கீகரிப்பது விவாகத்திற்கு உடன்படுவதாகும். அதைத் திருப்பி யனுப்புவது விவாகத்திற்குச் சம்மதப்படாமையைக் குறிப்பதோடு அனுப்பினவர்களை அவமானப்படுத்தினதாகவும் கொள்ளப்படும்.

தன் மந்திரிகள் அதை ஒப்புக்கொள்ளவேண்டாமென்ற போதிலும், ஹமீர் தனது பிதிரார்ஜித நகரத்துள் சென்று தனது மூதாதையர் கட்டிய படிகளின் மீதாவது ஏறிச் சென்றுவர ஆசைகொண்டவனாய் அத் தேங்காயை நிறுத்திக்கொண்டான். பின்பு ஐந்நூறு குதிரைவீரர்களோடு கூடிய பரிவாரங்களுடன் சித்தூருக்குப் புறப்பட்டுப் போனான். அவனது வரவைப் பார்த்துக்கொண்டிருந்த மால்தேவனின் புதல்வர் ஐவரும் கோட்டைக்கு வெளியே சென்று அவனை எதிர்கொண் டழைக்க, தனது ஆயுளில் முதன் முதல் தனது முன்னோரால் கட்டப்பட்ட சித்தூர்ப் பிராகாரத்தினுள் நுழைந்தான். ஆனால் கல்யாண கோலமாய் அமைக்கப்படும் தோரணம் ஒன்றும் காணப்படவில்லை. கல்யாண காலத்தில் மூன்று மரச்சட்டங்கள் முக்கோணம்போல் நடப்பட்டு அதன் மேல் ஒரு மயூர விக்ரகம் நாட்டப்படும். இதைத்தான் ராஜபுத்ரர் தோரணம் என்று சொல்லுவது. மணமகன் குதிரையின்மீதேறித் தனது ஈட்டியினால் இத்தோர

ணத்தை முறித்துவிடுவது வழக்கம். அப்போது பக்கத்திலுள்ள மேடைகளின்மீது நின்றுகொண்டு அதனைக்காக்கும் மாதர்கள் பாட்டுப் பாடிக்கொண்டு புஷ்ப பாணங்களையும் மஞ்சள் பொடியையும் மணமகன்மீது விட்டுவிட்டு எறிவார்கள். இக்கோலம் யாதொன்றும் இல்லாதது ஹமீருக்கு ஆச்சரியமாயிருந்தது.

கனகசேனன் வம்சத்தாரால் கட்டப்பட்ட பெரிய மண்டபத்துட் சென்று சகலரும் இருக்க, ஹமீரைக் கூட்டிக்கொண்டு போய் நடுவி லிருக்கும் ஆசனத்தில் அமர்த்தினர்கள். கல்யாணச் சடங்குகளில் ஒன்றும் நடத்தப்படாமையைக் கண்ட மணமகனுக்கு ஆச்சரிய முண்டான போதிலும் அதை அவன் வெளியிட்டுக்கொள்ளவில்லை. பின்பு அவனது வஸ்திர நுனியுடன் கல்யாணப் பெண்ணின் வஸ்திர நுனியைச் சேர்த்து முடிபோட்டு வெகு அமைதியாய்ப் பாணிக்கிரகணமும் நடந்தது. விவாகம் முடிந்ததென்று சகலரும் ஒப்புக்கொள்ளச் சபையும் கலைந்தது. ஹமீர் ஒரு விதவையை மணம்புரிந்து கொண்டான்! இது ராஜபுத்ரர்களுள் மிக இழிந்தவர்களும் செய்யமாட்டார்கள் அவனுக்கு வந்த கோபம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லிமுடியாது. ஆனல் அவள் குழந்தைப் பருவத்திலேயே யாருக்கோ மணம் புரிவிக்கப்பட்டுக் கொஞ்சக் காலத்திற்கெல்லாம் விதவையானு ளென்பதும், அவளுக்கு அவனது முகத்தைக்கூடப் பார்த்த நினைவு கிடையாது என்பதும் கேட்டுச் சற்றுக்கோபந் தணிந்தான். தனது நாயகனிடத்துள்ள உண்மை யன்பையும் பக்தியையும் குறித்துச் சபதம் செய்ததோடு சித்தூரை மீட்டுக்கொள்ள

அவள் சொன்ன ஓர் உபாயத்தையும் கேட்டு ஹமீர் மிகவும் ஆறுதல் அடைந்தான். மணமகனுக்கு மற்றைச் சீதனங்களோடு எதாவது ஒரு வரம் பெற்றுக் கொள்ளுதற்கும் உரிமையுண்டு. அச் சமயத்தில் சித்தூர் நகர உத்தியோகஸ்தருள் ஜால் என்பவனைத் தன்னிடமே வேலைசெய்து கொண்டிருக்க அனுமதி கொடுக்கவேண்டுமென்று கேட்கச் சொன்னாள். அங்ஙனமே இவன் கேட்க ஜாலும் இவன் வசம் ஒப்புவிக்கப்பட்டான். உடனே ஹமீரும், அவன் மனைவியும் ஜாலும் பரிவாரங்களுடன் புறப்பட்டுக் கைல்வாராவுக்குப் போயினர்.

கொஞ்சக் காலத்திற்குள் இவருக்கு ஒரு ஆண் மகவும் பிறந்தது. அக் குழந்தையுடன் சித்தூரிலுள்ள தங்கள் குலதெய்வத்தின் கோவிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செலுத்தி வரவேண்டுமென்ற தன் மனைவியின் வேண்டுகோளுக் கிணங்கித் தக்க பரிவாரங்களுடன் அவளையும் துணைக்காக ஜாலையும் சேர்த்தனுப்பினான். அதுதான் சித்தூரில் சரியான சமயம். மால்தேவன் தனது ஸைந்யங்களுள் பெரும்பான்மையுடன் ஊரைவிட்டு வெகுதூரத்திற் கப்பால் நடக்கும் போருக்குச் சென்றிருந்தான். சித்தூரிலுள்ள சில்லறை யாட்களைச் சரிப்படுத்திக் தங்கள் வசம் திருப்புவதற்கு ஜாலை யனுப்பித் தனது கணவனை ஹமீருக்கும் உடனே சேனைகளுடன் வரும்படியாய்ச் செய்தி யனுப்பினாள். ஹமீர் சித்தூருக்குள் எதிர்ப்பாரின்றி வெகு சுலபமாய் நுழைந்து அதைத் தன் வசமாக்கிக் கொண்டு தனது முன்னோர்களுடைய ஆசனத்தில் அமர்ந்துகொண்டான். மால்தேவன் எஞ்சிய சேனையுடன் திரும்பிவந்ததும் சித்தூரில் நடந்ததைக்கேட்டு

ஹமீருடன் போருக்குச் செல்லத் தைரியமில்லாதவனாய், டில்லிக்குப் போய் அங்கு அல்லாவுதீனுக்குப் பிறகு ஆண்டுவந்த முகம்மது என்னும் அரசனிடம் இதைத் தெரிவித்தான். முகம்மதும் நேராகப் புறப்பட்டுச் சித்தூரை நோக்கிச் சேனையுடன் வந்தான்.

இதற்குள் ஹமீர் கைல்வாராவிலுள்ள சேனைகளையெல்லாம் வரவழைத்து, மீவார நாட்டிலுள்ள ராஜபுத்ரத் தலைவர் அனைவரையும் சேர்த்துக்கொண்டு போருக்குத் தயாராயிருந்தான். முகம்மதியர் மேழைப் பிரதேசங்களில் வந்ததும் வழி தெரியாமல் திகைத்துச் சிங்கோலி என்னும் இடத்திற்கு வந்து சேர்ந்தனர். நடந்த பிரமாதமான சண்டையில் முகம்மதியர் தீர முறியடிக்கப்பட்டதோடு முகம்மதும் சிறைப்படுத்தப்பட்டான். மூன்று மாதம் கழித்து, ஆஜ்மீர், ரிந்தாம்பூர், நாகூர் இக் கோட்டைகளைக் கொடுப்பதோடு ஆறு லக்ஷ ரூபாயும், நூறு யானைகளும் கொடுத்து நஷ்டபூர்த்தி செய்ய ஒப்புக்கொண்டதன்பேரில் முகம்மது விடுவிக்கப்பட்டான்.

மால்தேவனின் மகனாகிய பான்பர் என்பவன் ஹமீரிடம் சென்று தனக்கு அந்த ராஜ்யத்தில் ஏதாவது ஓர் உத்தியோகம் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள, ஹமீர் அவனை ஒரு ஜாகீர்தாரனாக்கி, "இதை வைத்துக்கொண்டு என்னிடத்திலும் விசுவாசமாய் இரு. ஓர் அன்னிய துருக்கியன் கீழல்லாது உன் ஜாதி அரசனிடமே அமர்ந்திருக்கும் கௌரவத்தை அடைந்திருக்கிறாய்'' என்றான். அப்படியே பான்பரும் தன்னாயுளெல்லாம் ஹமீரிடத்தில் விசுவாசம் காட்டி உழைத்துவந்தான். இனிச் சிசோதை

யரின் நல்ல காலம் ஆரம்பித்துவிட்டது. மார்வார், ஜயபூர் முதலிய அநேக ராஜபுத்ர நாட்டு அரசர்கள் சித்தூர் ராணுவுக்குக் கப்பங்கட்டினார்கள். வட இந்தியாவிலுள்ள அரசர்களுள் ஹமீருக்கு மிஞ்சினவர் கிடையாது.

அவனுக்குப் பின் வந்த ராணுக்களாகிய க்ஷைத் ஸிங், லக்கா என்பவர்கள் காலத்தில் சித்தூர் ராஜ்யத்தின் பிராபல்லியம் அதிகரித்து வந்தது. லக்கா வட மேற்கேயுள்ள ஹாராவளி மலைப்பிரதேசங்களை எதிர்த்துச் சென்று அவைகளை ஜயித்தான். இவன் காலத்தில்தான் சாப்பானிலுள்ள தகரம் வெள்ளி முதலிய உலோகக்கனிகளைக் கண்டுபிடித்து அவைகளை வெட்டியெடுக்க ஆரம்பித்தது. இந்த லாபத்தைக்கொண்டு பல குளங்கள் வெட்டிப் பலகோட்டைகள் கட்டியதோடு அல்லாவுதினால் இடித்துத் தள்ளப்பட்ட கோவில்களும் அரண்மனைகளும் மீண்டும் கட்டப்பட்டன.

சித்தூரை மீட்ட இருநூறு வருஷங்களாக மீவாரநாடு முழுவதும் பலவிதத்திலும் செழித்தோங்கியது. அந் நாட்டைச் சுற்றிலும் அநேக முகம்மதிய நாடுகள் இருந்தன. வடக்கே டில்லி, தெற்கே மால்வா, மேற்கே குஜராத், இவைகளுள் ஒன்றையும் தலையெடுக்க வொட்டாமலே சித்தூரார்கள் அடக்கிவைத்திருந்தனர். முகம்மதிய அரசர்களெல்லாம் சித்தூர் ராணுவின் தயவையே எதிர்பார்த்திருந்தார்கள்: முகம்மதிய சக்கரவர்த்திகள் — டோக்லாச், கில்ஜி, லோடி முதலிய வம்சஸ்தர்கள் — எல்லாரும் ராணுவின் சிநேக பாக்கியத்தை விரும்பினார்கள். இவ்

வளவு பேர்போன இந்த மீவாரநாட்டின் வளப் பத்தின் பொருட்டு ராஜாக்கள் எவ்வளவோ சிரமம் எடுத்துக்கொண்டு பாடுபட்டார்கள் என்பது அக்காலத்தில் கட்டப்பட்ட கோவில்கள், கோட்டைகள் முதலிய பொதுக்கட்டடங்களைப் பார்த்தால் நன்கு புலப்படுகிறது. ஒரு ஜயஸ்தம்பத்தை மாத்திரம் பார்த்தால் அதைக் கட்டி முடிக்க ஒரு பெரிய ராஜ்யத்தின் வரும்படி முழுவதையுமே செலவழித்திருக்கவேண்டுமென்று சொல்லலாம். ஒவ்வொரு வருஷமும் புதுக்கட்டடங்களுக்கும் ஞாபகச் சின்னங்களுக்கும் ஏராளமான பணம் செலவிடப்பட்டது. மிகவும் கைதேர்ந்த சிற்பிகளும் சித்திர வேலைக்காரர்களும் தலைநகரைச் சிறப்பிக்கப் பல நாடுகளிலிருந்து வரவழைக்கப்பட்டனர். இத் தொழிலாளிகளுக்குக் கை கூசாமல் வெகுமதி யளிக்கப்பட்டது. ஜயசீலரான ராஜாக்களால் நாட்டின் எல்லை அதிகரிக்க அதிகரிக்க அதைத் தகுந்தபடி பாதுகாப்பதற்காகக் கட்டப்பட்ட 84 கோட்டைகளுக்காகவும், ஆங்காங்குச் சேர்க்கப்பட்ட சளைக்கில்லாத குதிரைப் படைகளுக்காகவும் செலவு செய்த திரவியம் எங்கிருந்துதான் வந்ததோ !



## 5. ராணு கும்பன்



ஸ்திரீகளைக் கௌரவப்படுத்தி அவர்களிடத்தில் பற்றுடையவரா யிருப்பதில் நாகரிக மடைந்த மற்றெந்த ஜாதியாருக்கும் ராஜபுத்ரர் தாழ்ந்தவ ரல்லர். தனது தேவியுடன் ஆலோசிக்காமல் ராஜபுத்ரன் ஒரு

காரியத்திலும் பிரவேசிக்கமாட்டான். வீட்டிலோ வெளியிலோ நடக்கும் விவகாரங்களிலெல்லாம் அவள் செல்வாக்கே பலிக்கும்.

ராஜபுத்ர ஸ்திரீகளை மானபங்கமின்றிக் காப்பதற்காகவும், தனது மனத்தைக் கவர்ந்தவளின் அபிமானத்திற்கு ஆளாவதற்காகவும் எந்த ராஜபுத்ரனும் வெகு அசாத்தியமான வீரச் செயல்களையும் புரியத் துணிந்துவிடுவான். ஸ்திரீகளினிடத்தில் வினயந் தப்பி நடப்பதைக் காண்பதைவிட அவனைக் கோபமூட்டத்தக்கது வேறொன்று மில்லை. சாதாரண பரிகாசங்களுங்கூட வெகு பிரமாதமாக்கப்பட்டு அநேக ரணகளங்களுக்குக் காரணமானதாக ராஜபுதன சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இருந்தபோதிலும் வீட்டு வேலைகளைச் சரிவரக் கவனித்து வருவதே ராஜபுத்ர ஸ்திரீகளுக் கழகாகும். கிருக பரிபாலன விஷயங்களில் ஏதாவது குறைநேர்ந்தால் அதுவே பெருங்குற்றமாகக் கருதப்படும். முன்னொரு காலத்தில் மீவாரநாட்டு ராணு ஒருவர் தனது மகளை ஓர் அந்நிய நாட்டு ராஜபுத்ரனுக்கு மணம்புரிவித்து அவனைத் தனக்குட்பட்ட ஸாத்ரி ஜில்லாவின் ஜாகிருக்கும் தலைவனாக்கினர். ராணுவின் மகள் தனது புருஷனுடைய குறைந்த அந்தஸ்தைப்பற்றி அவனைச் சட்டைபண்ணுதிருந்தாள். ஒருநாள் அவன் தனது மனைவியைப் பார்த்து, "ராணுவத்ஜி, கொஞ்சம் தீர்த்தம் கொண்டுவா" என்று சொல்ல, அவள், "நான் அரசர்களுக்கு அரசான ராணுவின் மகள் கேவலம் ஸாத்ரி ஜில்லாத் தலைவனுக்குத் தண்ணீர் தூக்கிவர முடியாது" என்று உதா

சினமாய்ப் பதிலளித்தாள். "நல்லது, எனக்குப் பிரயோஜனம் இல்லாமல் நீ என் வீட்டில் இருக்க வேண்டிய அவசியமில்லை. உன் தகப்பன் வீட்டிற்கே போகலாம்" என்று சொல்லிவிட்டு, உடனே அத்தலைவன் ஒரு தூதன் வழியாய் ராணுவுக்கு நடந்ததையெல்லாம் சொல்லியனுப்பினுன். அவளும் அத்தூதனேடேயே தன் தகப்பன் வீட்டிற்குப் போய் விட்டாள். கொஞ்சநாளைக்கெல்லாம் ஸாத்ரித் தலைவன் ராணுவின் தர்பாருக்கு வரவழைக்கப்பட்டான். வந்ததும் வழக்கம்போல் ராணுவின் வலப்புறத்தில் ஆசனமளிக்கப்பட்ட அத் தலைவன் தனது குறைகளை விவரமாய் எடுத்துரைத்தான். தர்பார் கலைந்ததும் ஏதோ சைகையின்பேரில் ராணுவின் மூத்த மகனுன இளவரசன் இத் தலைவனது மிதியடிகளைக் கையில் தூக்கிக்கொண்டு ஓரமாய் ஒதுங்கி நின்று அவனது வரவைப் பக்தியோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். இதைப் பார்த்ததும் ஸாத்ரித்தலைவன் நடுநடுங்கி விநேயனுன தான் மகாராணுவுக்கு அபசாரஞ் செய்ததை க்ஷமிக்கவேண்டுமென்று மொழிகுழறினுன். அதற்கு மகாராணு, "என் மருமகனுன பிறகு உனக்கு நாங்கள் செய்யும் உபசாரம் எதுவும் ஒரு பிரமாதமாகாது. உன் மனைவியை அழைத்துச்செல். இனி அவள் உனக்குத் தண்ணீர் கொண்டுவர மறுக்கமாட்டாள்" என்றுன்.

ராஜபுத்ரர்கள் தங்கள் ஸ்திரீகளிடத்தில் மரியாதையாய் நடந்துகொள்வதும், அநேகமாய் அவர்களுடைய அபிப்பிராயங்களுக் குட்படுவதுமான அந்த ஜாதிவழக்கத்தை விளக்கும் ஒரு சிறு ஸம்பவம்

இங்கே குறிப்பிடத்தகுந்தது. அம்பர் நாட்டு அரசனாகிய பேர்பெற்ற ஜயஸிங் என்பவன் கோட்டாநாட்டரசன் மகளை மணம்புரிந்து கொண்டான். ஒருநாள் ஜயஸிங் தன் மனைவியுடன் தனித்திருந்த ஸமயத்தில் அவளது உடையைப் பார்த்து, "இது என்ன உங்கள் வீட்டார் தங்கள் உடையை இவ்வளவு தூரம் பெருக விட்டிருக்கின்றார்கள். எங்கள் மாதரது உடைகள் எவ்வளவு கச்சிதமாயிருக்கின்றன, பார்" என்று விளையாட்டாகச் சொல்லிக்கொண்டு ஒரு கத்தரிக் கோலைக்கையி லெடுத்து, "என் இதைச் சரியாகக் கத்தரித்து விடக்கூடாது?" என்றான். தனது பிறந்த வீட்டாரை இங்ஙனம் ஏளனம் செய்வதைச் சகியாதவளாய், உடனே அவள் தன் நாயகனுடைய வாளைப் பிடுங்கிக்கொண்டு, "இனி எங்களை இம் மாதிரியாக அவமதித்தால் நீங்கள் அக் கத்தரிக்கோலை உபயோகப்படுத்துவதைவிட அதிக சாமர்த்தியத்துடன் கோட்டாநாட்டரசன் மகள் இவ் வாளை உபயோகப் படுத்துவாள். நடந்த விவாக சம்பந்தங்களெல்லாம் நிஷேதிக்கப்படும்" என்றாள்.

இம் மாதிரியான ஒரு சாதாரண பரிகாசந்தான் மீவாரநாட்டு ராணுவாகிய லக்காவின் மூத்தமகனை சண்டனைச் சிம்மாசனம் ஏறவொட்டாம லடித்த தோடு அந்நாட்டிற்கே உண்டான ஒரு பெரிய விபத்திற்குக் காரணமாயிற்று. லக்கா ராணுவுக்கு விருத்தாப்பியம் வந்துவிட்டபடியால் தனது மற்றப் பிள்ளைகளையும் பேரன்மார்களையும் தக்க ராஜ்யபாரங்களில் அமர்த்திச் சண்டனுக்கு முடிசூட்ட இருக்கும்போது இளவரசனுக்குப் பெண்கொடுப்பதாக மாண்டார நாட்டரசனிட மிருந்து மங்களகரமாய்

ஒரு தேங்காய் வந்தது. சண்டன் அரண்மனையி லில்லாமலிருந்ததால் வந்த தூதர்களை லக்கா தானே நேராகவரவேற்றுத் தக்கபடி உபசரித்து, "இருங்கள், இளவரசன் சீக்கிரம் வந்துவிடுவான். தாடி நரைத்த என்போன்ற கிழவனுக்காக அத் தேங்காய் கொண்டு வரப்படவில்லை என்று நம்புகிறேன்" என்று மீசை மீது கைபோட்டவனாய் அவர்களைப் பார்த்துச் சொன்னான். சண்டன் திரும்பி வந்ததும் இதே வார்த்தைகள் உரைக்கப்படவே, தனது தகப்பன் ரஸத்திற்காகவாயினும் வினயமில்லாமல் தனக்கா என்று கேட்டதற்கு மனம் வருந்தினவனாய் அத் தேங்காயை ஒப்புக்கொள்ள மாட்டேனென்று ஒரே பிடிவாதமாய்ச் சொல்லிவிட்டான். மகனோ ஹடம் பண்ணுகிறான். மாண்டார நாட்டரசனுக்கு அதைத் திருப்பியனுப்புவதும் மரியாதையன்று. ஆகையால் கிழவர் அத் தேங்காயைத் தானே எடுத்துக்கொண்டு தனக்காகவே அவ் வரனை ஒப்புக்கொண்டார். அவ்விவாகத்தின் பொருட்டு லக்காவுக்குப் பிள்ளை பிறந்தால் அவனுக்கே முடிசூட்டி வைக்கவேண்டுமென்று சண்டனைச் சபதம் செய்து கொடுக்கச்சொல்ல, அவனும் தனது தகப்பன் வேண்டுகோளை நிறைவேற்றுவதாகச் சிசோதையர் குலதெய்வமாகிய ஏகலிங்க சாக்ஷியாக வாக்களித்தான்.

விவாகமான ஒரு வருஷத்திற்கெல்லாம் கிழவனுக்கு மொகல் என்ற மகன் பிறந்தான். அச் சிறுவனுக்குப் பட்டங் கட்டிவிட்டுக் கயாவுக்குப் போக அவன் உத்தேசித்தான். பட்டாபிஷேக காலத்தில் சண்டன் எல்லாருக்கும் முதலில் வந்து தனது வாக்கை நிறைவேற்றுபவனாய் இவ்விளவரசனை ஒப்புக்கொண்டு

தனது ராஜவிசுவாசத்தையும் பகிரங்கமாய்த் தெரிவித்துக்கொண்டான். ராஜாங்கத்தை நிர்வகிக்கும் பிரபுக்களுள் முதல் ஸ்தானத்தை மாத்திரம் தானே வகித்துக்கொண்டு, லக்கா சயாவுக்குப் போய் இறந்த நாள்முதல் தனது இளைய தம்பிக்குத் தக்க பிராயம் வரும்வரையில் ராஜ்யபாரத்தைத் தானே தாங்கினவனாய் மிக்க பொறுப்புடன் பரிபாலனஞ்செய்து வந்தான். அரசனது இளமைபற்றித் தனது மூதாதையர்களின் பெயர் கெடாமலிருக்க இவன் பட்ட பாடு சொல்லி முடியாது.

மொகல் பட்டத்திற்கு வந்து இருபது வருஷ காலம் செவ்வையாய் அரசுபுரிந்துவந்தான். 1419-ம் வருஷத்தில் இவனது மகனாகிய கும்பன் சிம்மாசனம் எறினான். அல்லாவுதீன் சித்தூரைச் சூறையாடி இப்போது நூறு வருஷங்கள் ஆயின. அக் கொடுமையான நாசத்திலிருந்து தலைதூக்கி முன்னிலும் பதின்மடங்கு அதிக சிறப்புடன் கட்டப்பட்ட இச் சிசோதய ராஜதானியில் விளங்கிவரும் வீரர்களைப் பார்த்தால் அக் காலத்தில் மீவார நாட்டைக் காக்கும் பொருட்டுத் தங்களது உடல் பொருள் ஆவியையும் மனைவி மக்களையும் விட்ட தேசாபிமானிகளே மீண்டும் தங்கள் நாட்டைக் காப்பதற்காக மறு பிறவி எடுத்து வந்தாற்போல் தோன்றியது. ஐபசிலனாகிய ஹமீரின் வீரமும் சாமர்த்தியமும் பெற்று, லக்காவைப்போல் தனது நகரைச் சித்திரவேலைத்திறம் முதலிய அழகிய வேலைப்பாடுகள் அமைத்துச் சிறப்பிப்பதில் மிகுந்த ஆவலுடையவனாகிய கும்பனின் ஆட்சியின்கீழ்ச் சித்தூரின் கொடிகள் கம்பீரமாய்க் காகர் நதிக்கரையின்மீது பறந்துகொண்டிருந்தன.

காக்கஸஸ் மலைப் பிராந்தியங்களினின்றும் ஆக்ஸஸ் நதிக்கரைகளினின்றும் கிளம்பிவந்து ராஜபுதனத்திலுள்ள இவ்வழகிய நாட்டின்மீது வீசப்போகும் மற்றொரு சூறைக்காற்றின் கொடுமையினின்று காத்துக்கொள்ளவேண்டிக் கட்டப்பட்ட எண்பத்தாறு கோட்டைகளுள் முப்பத்திரண்டு கும்பனால் கட்டப்பட்டன. அவைகளுள் என்றும் அழியாத கோமல்மர் அல்லது கும்பன் கோட்டையே அவனது அசாத்திய உழைப்பையும் சாமர்த்தியத்தையும் விளக்கிக் காட்டப் போதுமானது. அது சமுத்திர மட்டத்திற்கு மூவாயிரம் அடிக்குமேல் உயர்ந்துள்ள ஒரு செங்குத்தான உன்னத குன்றின்மீது கட்டப்பட்டிருக்கிறது. அதன்கீழ்ப் பல மைல்களுக்கப்பால் சுற்றிலும் அநேக கோபுரங்களும் கொத்தளங்களும் அமைக்கப்பட்டதாகிய பருத்துந்த மதிலும் எழுப்பப்பட்டுள்ளது. கோட்டையின் வாசலுக்குப் போவதற்குமுன் ஒடுக்கமான மார்க்கமாய் ஏறி நாலு வாசற்படி தாண்டவேண்டும். வரிசை வரிசையாய் மேன்மேலுமுள்ள கொத்தளங்களுக்கப்பால் உள்ளதோர் கட்டடந்தான் ராணுவின் "மஞ்சு கண்துஞ்சும் இஞ்சி" யுடைய அரண்மனை. ஆபு சிகரத்தில் கட்டப்பட்ட ஒரு கோட்டையிலும் அவர் அடிக்கடி போய்த் தங்கினதுண்டு. அங்குள்ள பெரிய மருந்துக் கிடங்கும் அபாயத்தை அறிவிக்கும் கோபுரமும் அவன் பெயரையே தெரிவிக்கின்றன.

அங்குள்ள ஒரு சிறிய கோவிலுள் இவனுடைய உருவச் சிலையையும் காணலாம். இவன் கட்டிவைத்த கோவில்களுள் மிகவும் பெரியது ஸாத்ரிச் கணவாயிலுள்ளது. இக்கோவிலைக் கட்டி முடிக்க ஒன்றரைக்

கோடி ரூபாய்க்குமேல் செலவழிக்கப்பட்டதென்று சொல்லுகிறார்கள். இக் கட்டடத்தில் மூன்று உப்பரிகைகள் உண்டு. நாற்பதடி உயரமுள்ள கருங்கல் தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. கோவிலின் உள் ளறை இரத்தினங்களால் இழைக்கப்பட்டிருக்கிறது.

கும்பன் கிரந்தகர்த்தாவெனவும் புகழ்படைத்தான். கீதகோவிந்தம் என்னும் கிரந்தத்திற்குப் பாஷ்யம் எழுதினவர் இவரே. இவரது மனைவியாகிய மீராபாய் மிக்க அழகுவாய்ந்தவளாயும், தர்மிஷ்டையாயும், கவித்திறமுடையவளாயு மிருந்ததாகத் தெரியவருகிறது. அவள் எழுதிய பாடல்கள் இன்றும் அதிகமாகக் கொண்டாடப்படுகின்றன.

கும்பனின் வீரத்தைத் தெரிவிக்கும் அநேக காரியங்களில் மால்வா, குஜராத் என்ற 'இரண்டு நாடுகளினின்றும் சேர்ந்து வந்த ஸைந்யங்களை ஒருங்கே அவன் வென்றுவிட்டமை வியக்கத்தக்கது. அவைகளை எதிர்ப்பதற்காகக் கும்பன் பத்து லக்ஷம் குதிரைப் படைகளுடனும் பதினாலாயிரம் யானைகளுடனும் சென்று எதிரிகளைத் தீர முறியடித்ததோடு மால்வா நாட்டரசனை மாமூதையும் சிறைப்படுத்திக்கொண்டு சித்தூருக்குத் திரும்பி வந்தான். மாமூதை ஆறுமாதம் சிறையில் வைத்திருந்ததாக மீவார நாட்டுச் சரித்திரத்தில் சொல்லி யிருந்தபோதிலும் பேர்போன சரித்திர கர்த்தாவாகிய அபுல்பாஸல் என்பவர் கும்பனைப்பற்றி மிகவும் புகழ்ந்து தனது சத்துருவையும் விடுதலைப்பணம் முதலிய ஒன்றும் வாங்கிக்கொள்ளாமல் விட்டுவிட்ட பெருந்தன்மை யாளனென்று வியந்து கூறியிருக்கிறார்.

தான் ஜயமடைந்ததைக் குறிக்கக் கும்பனால் நாட்டப்பட்ட ஒரு பெரிய ஸ்தம்பம் இன்றும் காணப் படுகிறது. இதைக் கட்டி முடிக்கப் பத்து வருஷ காலமாயிற்றும். ஐம்பது வருஷகாலம் கும்பன் இங்ஙனம் மிக்க புகழுடன் அரச புரிந்துவர அவனது கியாதி எங்கும் பரவிற்று. அவனது ஆட்சியின் ஐம்பதாவது வருஷபூர்த்தியைக் கொண்டாட இருக்குந் தருணம் மீவாரநாட்டுச் சரித்திரத்தில் எழுதப்பட்டுள்ள வெகு கேவலமான ஸம்பவம் ஒன்று நேர்ந்துவிட்டது. ஒரு குத்துவாளால் கும்பன் ஆயுள் குறுகிற்று. காதகன் அவன் சொந்த மகனே!



## 6. ராணு ஸங்கன்



பெற்ற தகப்பனைக் கொன்றவனுடைய பெயரையும் சொல்லவேண்டுமோ! தனது பந்துக்களால் தள்ளப்பட்டு, நாட்டாராலும் வெறுக்கப்பட்ட இவன் தனக்கு வேண்டியவர்களுக்குத் தன் கீழுள்ள சிற்றரசர்களுடைய நாடுகளையும் ஜாகீர்தார்களுடைய நிலங்களையும் பிடுங்கிக் கொடுப்பதும் அயல்நாட்டரசர்களின் துணையை லஞ்சங்கொடுத்துத் தேடுவதுமாயிருந்தான். தன்னை ஒப்புக்கொண்டால் டில்லியரசனுக்குத் தனது மகளையே விவாகம்செய்து கொடுக்கத் தான் த்யாராயிருப்பதாகச் சொல்லி யனுப்பினான். தேசாபிமானமும் மதாபிமானமும் சன்மார்க்கமுமே உருவெடுத்து வந்தாற்போலிருந்த சித்தூர் ராணுக்களின் குடியைக் கெடுக்க வந்த இக் கோடரிக்காம்பின்

தலையில் ஒரு இடி விழக்கூடாதா என்று யார் சாபமிட்டனரோ, டில்லியரசனது தர்பாரிலிருந்து வெளி வந்தவுடனே அங்கே ஒரு மின்னல் மின்னி இடி இடித்து இவனைத் தரையில் வீழ்த்திற்று.

இக்காதகனே தனது தமையனும் யுவராஜனுமான ரேமானுக்குப் பாதகனுயிருந்தான். அவனமடியவே ரேமால் வெகு சுலபமாய் எதிரிகளை வென்று பட்டத்திற்கு வந்தான். அவனுடைய மூன்று பிள்ளைகளும், தம்பியாகிய சுராஜ்மாலும் ஒருவருக்கொருவர் பின்னுல் பட்டத்திற்காகப் போராடினர்கள். கடைசியில் மூத்தமகனுன ஸங்கனைத் தவிர மற்ற மூவரும் மாண்டுபோயினர்.

1509ம் வருஷத்தில் ஸங்கன் சித்தூர் ராணுவாக்கப்பட்டான். வட இந்தியாவிலுள்ள மற்றெந்த நாடும் இதற்குச் சமானமாகாது. டில்லி ராஜ்யமோ பல ஸ்வராஜ்யங்களாக உடைந்துவிட்டது. எவ்வளவு தான் மாளவநாட்டரசனும் குஜராத்நாட்டரசனும் சேர்ந்து எதிர்த்தபோதிலும் மீவார நாட்டைச் சற்றும் கெடுக்க முடியவில்லை.

ஸங்கனின் பரிவாரங்கள் பிரமிக்கத்தக்கவை. எண்ணுயிரம் குதிரைவீரர்கள், உயர்ந்த பதவியை வகிக்கும் எழு ராஜாக்கள், ஒன்பது ராயர்கள், நூற்றுநாலு பெரிய ஜாகிர்தார்கள், ஐந்நூறு யானைகள் இவைகள் பின் தொடர, ராணு போருக்குச் சென்று மால்வா டில்லி அரசர்களுடன் போர்புரிந்து அவர்களைப் பதினெட்டு இடங்களில் தோற்கடித்தான். மார்வார் அம்பர் நாட்டரசர்கள் வந்து முடிவணங்க, குவாலியர், அஜ்மீர், சிக்ரி, ரேசின், சந்த்ரி, பூண்டி, ராமபுரம், ஆபு

இந்நாட்டரசர்கள் கப்பங்கட்டிவர ஸங்கன் சித்தூரின் ராஜாதி ராஜனுக விளங்கிவந்தான். இவனது ராஜ்யம் வடக்கே பிலக்கால்நதி வரையிலும், தெற்கே மாளவ எல்லையளவும், மேற்கே ஸிந்துநதி வரையிலும், கிழக்கே தன்னுட்டு மலைகளையும் சேர்த்து ராஜபுதனத்தின் பெரும்பான்மையையும் உட்கொண்டு விரிந்து நின்றது. இங்ஙனம் விசாலித்துக்கொண்டு வருவதைப் பார்த்தால் வட இந்தியாவில் இந்த்ராப்பிரஸ்தத்திலிருந்த ஏகாதிபத்யக் கொடியானது சித்தூரில் நாட்டப்படும்போல் தோன்றிற்று. இப் பாக்யம் அவ்வழகிய நகரத்திற்குக் கிட்டுவது அஸாத்தியமன்று. வடக்கிலிருந்து புதிதாய் வந்த டார்ட்டாரிய கூட்டங்கள் வட இந்தியாவில் திடனழிந்து சிதறிக்கிடக்கும் தங்கள் மதஸ்தர்களையும் சேர்த்துக்கொண்டு மறுபடியும் இந்துஸ்தானத்தின்மீது வந்து விழாதிருந்தால் சித்தூர் ஏகாதிபத்தியம் ஏற்பட்டிருக்கவுங் கூடும்.

தனது இளமையில் பன்னிரண்டாம் வயதிலேயே பர்கானுவுக்கு அரசனுக்கப்பட்ட பாபர் என்ற முகலாய முகம்மதியன் ஸங்கனைப் போலவே வெகுகாலம் கஷ்டத்திலேயே அடிபட்டு வந்தவன். அவன் வாழ்நாள் முழுவதும் வெற்றியும் தோல்வியுமாகவேயிருந்தது. ஒரு சமயம் ராஜ்யாதிபதியாய் வணங்கப்படுவதும் உடனே அடுத்த நிமிஷத்தில் ஒருதவியுமின்றித் தன்னந்தனியாகத் தப்பியோடி தனது கைப்பலத்தினுலேயே தன்னைக் காத்துக்கொள்ள நேரிடுவதும் உண்டு. 1509 ம் வருஷத்தில் பர்கானுவிலிருந்து துரத்தப்பட்டு இந்துகுஷ் மலையைத் தாண்டிச் சிந்துநதியையும் கடந்து வந்து பஞ்சாபிலும் காபூலிலுமாக ஏழு வருஷகாலம் இருந்து வந்தான். பிறகு டில்லி

யாசனுகிய இப்ராஹீமை எதிர்த்துச் சென்று அவனுடன் புரிந்த போரில் வெகு சுலபமாய் ஜயமடைந்து அந்நாட்டிற் கரசனுனன்.

டில்லியாசனுன பிறகு 1527ம் வருஷத்தில் பாபர் ஆக்ராவை விட்டுப் புறப்பட்டு ராஜபுதனத்திலுள்ள அரசர்களுக்கெல்லாம் தலைவனுன ராணு ஸங்கனை எதிர்த்துச் சென்றுன். பியானு என்னுமிடத்தில் நடந்த சண்டையில் பாபரது 1500 டார்ட்டாரியர்களும் முறியடிக்கப்பட்டனா. மறுபடியும் அனுப்பப்பட்ட உப பலங்களுக்கும் அதே கதிதான் கிடைத்தது. இதைக் கேட்ட பாபர் சற்றும் மனந்தளராதவனுய்த் தனது முகாமுக் கருகில் அரண்கள் வெட்டித் தன்னுடைய பிரங்கிகளைச் சங்கிலிகளினுல் ஒன்றேடொன்று சேர்த்து அங்கே வைத்துக்கொண்டு தைரியமாய்த் தனது எஞ்சிய சேனைகளுடன் காத்துக்கொண்டிருக்க, ராஜபுத்ரர் பதினுனுநாள் விடாமல் இம் முகாமை முற்றுகை போட்டுக்கொண் டிருந்தனர். இந்துக்களுக்கே கடைசியில் அநுகூலமாய் விடும்போ லிருந்தது. முற்றும் செயலற்ற தனது நிலைமையைச் சற்றும் சகியாதவராய்ப் பாபர் தெய்வபலத்தின் மகிமைக்கு மனுஷபலம் எதுவும் ஈடாகாது என்று உணர்ந்து பகவானைப் பிரார்த்திக்க லானுன். கடவுளுடைய கருணைக் காளாவதற்கு முன் பாபச் செயல்களினின்று நீங்கவேண்டு மாதையால் அவன் தனது மதுபானம் செய்யும் வழக்கத்தை விட்டொழிக்க நிச்சயித்து, குடிப்பதற்காக உபயோகப்படும் பொற்பாத்திரங்களையும் வெள்ளிக் கிண்ணங்களையும் கொண்டு வரச்சொல்லி அவைகளை உடைத்து அத் துண்டுகளையெல்லாம் சந்நியாசிகளுக்கும் ஏழைகளுக்கும் கொடு

த்து விட்டு வரும்படி உத்தரவளித்துத் தனது சித்தத்தைச் சுத்திசெய்துகொண்டான்.

நிற்க, முகாமிலிருந்த பெரியவர்களும் சிறுவர்களும் ஒருமிக்கத் திகிலடைந்து நின்ருர்கள். தைரியமாய் முன்வந்து யோசனை சொல்ல யாருக்கும் திடமில்லை. மந்திரிமார்களெல்லாம் ஒருவர் பின் ஒருவராய் நழுவினுர்கள். இங்ஙனம் மனஞ்சோர்ந்து பின்வாங்குவோர் அனைவரையும் அழைத்துப் பாபர் பின்வருமாறு அவர்களுக்கு உபந்நியசித்தான்: "பிரபுக்களே, வீரர்களே, மனிதனுய்ப் பிறந்த எவனும் மரணத்திற் காளாக வேண்டியவனே. அந்தியத்திற்குள் வந்து நுழைந்தவன் இத் துயர்க்கலனிலிருந்து என்றைக்காவது போயே தீரவேண்டு மல்லவா? அப்படியிருக்க இவ் விகழுடம்பைத் தள்ளிப் புகழுடம்பை அடைவது எவ்வளவு மேன்மை! இக் களத்திலேயே உயிரைத் துறக்க நேரிடும் பக்ஷத்தில், அதுவும் கடவுளினது ஆஞ்ஞையல்லவோ! இங்கேயே நமக்கு வீர சுவர்க்கம் எற்பட்டிருக்கின்றது. உயிர் தப்பி ஜயமடைந்தாலும் அவரது பெயரே வழங்குவதாகும். ஆகையால் நாமெல்லோரும் ஒரே மனத்தினராய் இந்த உயிரும் உடலும் சேர்ந்திருக்கு மளவும் யுத்த களத்தை விட்டு நீங்குவதில்லை யென்று கடவுளின்மீது ஆணையிடுவோமாக."

இவ் வார்த்தைகள் அங்கிருந்தவர்களின் மனத்தையெல்லாம் கலக்கி விட்டது. ஒவ்வொருவனும் சொன்னபடியே சபதம்செய்து வாளை யுருவிக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டான். இரண்டு வாரமாய் இவர்களைத் தாக்கி முறியடிக்காமலிருந்தது ராஜபுத்ரர்களது பெருந் தவறு. அதற்குள் பாபர் தனது சேனை

களுக்குத் தைரியமூட்டி ராஜபுத்ரர்களை எதிர்த்துச் சென்று போட்ட பிரமாதமான சண்டையில் முகம் மதியர்களை ஜயித்துவிட்டனர்.

ராணு ஸங்கனே களத்தில் காயப்பட்டவனுய், ஜயமடைந்தாலன்றித் தனது சித்தூருக்குள் நுழைவதில்லை யென்ற சபதத்துடன் அருகிலுள்ள மலைப் பிரதேசங்களுக்குச் சென்று அங்கேயே இருந்தான். இவன் உயிரோடிருந்தால் அப்படியே தனது ஜயத்தைச் சாதித்திருப்பான். ஆனால் சரீரத்தில் பட்ட புண்கள் ஆறுமல் அவனது காலம் குறுகிற்று. கடைசிக்காலத்தில் அவனுடைய சரீரமுழுவதும் உத்தம போர்வீரனெனச் சொல்லும்படி காய மயமா யிருந்தது. தன் சகோதரனுடன் போட்ட சண்டையில் ஒரு கண் போய்விட்டது. டில்லியரசனுடன் புரிந்த போரில் ஒரு கை விழுந்துவிட்டது. ஒரு குண்டு அடிபட்டதனுல் ஒரு காலும் குறைந்துவிட்டது. மற்றப்படி சரீர முழுவதிலும் எண்பது இடங்களில் புண்பட்டிருந்தது. இப் புண்களெல்லாம் அப் போர் வீரனுடைய புகழின் கண்க ளல்லவோ?

ராணு ஸங்கனுக்குப் பிறகு அவனுடைய மூன்றுவது பிள்ளையாகிய ரத்னன் பட்டத்திற்கு வந்தான். இவனும் தனது முன்னேர்களது வீரமும் ஊக்கமும் உடையவனுய் ஜயமடைந்தா லல்லது போர்க்களத்தினின்று நீங்கித் தலை நகருக்குட் செல்வதில்லை என்ற ஹடம் வைத்திருந்தான். இருந்தபோதிலும் இவனுக்கு ராஜ்ய பாரத்தைத் தாங்குவதற்கு வேண்டிய அனுபோகமும் பிராயமும் இல்லாமையால் ராஜபுத்ர பால்யருக்குள்ள இயல்பான மிடுக்குடன் தலை கால்

தெரியாமல் பல சச்சரவுகளில் பிரவேசித்துச் சிக்கிக்கொண்டதின் பலனாக இவனது சொற்ப வாழ்நாளும் பிரயோஜனமில்லாமல் முடிந்துவிட்டது. இவனுக்கு நேரிட்ட மரணத்தின் காரணத்தை இங்கே சற்று விஸ்தரிக்கலாம். இச் சம்பவம் ராஜபுத்ரர்களுக்கு ரோஷம் வந்துவிட்டால் பழி வாங்குவதன் பொருட்டாக எவ்வளவு தூரம் தங்களது கௌரவத்தையும் மறந்துவிடுவார்கள் என்பதைக் காண்பிக்கிறது. ரத்னன் பட்டத்திற்கு வருவதற்கு முன்பே அம்பர் நாட்டரசனான பிருதிவி ராஜன் மகளைத் திருட்டுத்தனமாய் மணம்புரிந்து கொள்ளவேண்டித் தன்னுடைய இருமுனை வாளை அனுப்பி அதைத் தனக்குப் பிரதியாகவைத்து விவாகத்தை முடித்துக்கொண்டான். நடந்த ரகசியம் சற்றும் வெளிவராம லிருந்தது. கொஞ்சக் காலத்திற்கெல்லாம் பூண்டி நாட்டரசனான ஹரன் என்பவன் அவளைத் தான் மணம்புரிய வேண்ட, அங்ஙனமே நடந்தவுடன் அவளைத் தனது தலைநகருக்குக் கொண்டுபோய்விட்டான். ஹரனும் புகழ்பெற்ற ஒரு ராஜபுத்ரத் தலைவன். ரத்னனோ இவ் விஷயத்தைக் கேள்வியுற்றும் தான் செய்துகொண்ட களள விவாகத்தை மறந்து அசிரத்தையா யிருந்தாற் போல் காணப்பட்டது. ஆகையால் அந்த ராஜபுத்ரியும் அக்களவைப்பற்றி ஒன்றும் வெளியிடாமலிருந்து விட்டாள். இக் குற்றமே ரத்னன் மனத்தில் ஊடுருவிச் சென்றது. பழிவாங்கியே தீரவேண்டும் என்னும் ரோஷத்தினால் தனக்குச் சத்துருவாகிய அப் பூண்டியரசனை எவ்விதத்தாலாவது தொலைத்து விடவேண்டுமென்று சபதம் செய்துகொண்டான்.

இதை நிறைவேற்றுவதற்காக வசந்த காலத்தில் வரும் அகைரியா (=வசந்தவேட்டை) பண்டி-

கையை எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். அப்போது வழக்கம்போல் அரசர்கள் தங்கள் தங்கள் காட்டிற்குச் சென்று வேட்டையாடுவதுபோல் ரத்னன் தனது காட்டிற் கடுத்தாற்போ லுள்ள பூண்டியரசனுடைய காட்டிற்கு நேராகச் சென்று அங்கு ஹரன் வருவானென்று எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். தன்னைக் கொல்ல மறைந்து நிற்கும் ரத்னனைப் பாராமல் தனது வேட்டையையே நோக்கிச் செல்லும் ஹரனின்மீது ஓர் அம்பு பாய்ந்து அவனைக் கீழ்வீழ்த்திற்று. உடனே ரத்னன் ஓடிவந்து தனது வாளையும் அவன்மீது வீசினன். இங்ஙனம் வஞ்சகப்போர் புரிந்து தன்னைக் கொல்ல வந்தவனை ஹரன் தூஷித்தான். இத் தூஷணத்தைப் பொறுக்க முடியாதவனாய் ரத்னன் திரும்பியும் தனது குதிரையைத் திருப்பிவந்து கடைசியாய் அடித்துக் கொன்றுவிட்டே போகவேண்டுமென்று இருக்க, ஹரன் உயிர் தத்தளித்துக்கொண் டிருந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் உயிர்போய்விடும்போ லிருந்தபோதிலும் தனது பிராணனைப் பிடித்துக்கொண்டு தன்னுடைய நீண்ட கால்களால் தான் படுத்திருந்தபடியே அக் குதிரையை வெகு பலமாய் உதைத்ததில், ரத்னன் தனது நிலைதவறிக் கீழே விழுந்துவிட்டான். உடனே ஹரன் தனது உயிர்ப்பலமெல்லாம் சேர்த்து எழுந்து, விழுந்தவன் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான். இதுவன்றோ பழிக்குப்பழி வாங்கும் தருணம்! ரத்னன்மீது புரளும் ஸமயத்தில் தனது வாளை யுருவி அவனுடைய மார்பில் செலுத்தி, இனித் தனது சத்ருவும் இறந்தான் என்னும் வீரர்களுக் கியல்பாயுள்ள திருப்தியுடன் ஹரன் தன் உயிரை விட்டான்.



# 7. ராணி கர்ணுவதி



ரத்னனுக்குப் பின் அவனுடைய சகோதரனாகிய விக்ரமஜித் என்பவன் பட்டத்திற்கு வந்தான். இவனுக்கு ராஜ்யத்திலுள்ள பிரபுக்களைத் தன் வசமாக்கிக்கொள்ளும் திறமை கொஞ்சமும் இல்லை. அவர்களைச் சற்றும் மதியாமல் கேவலம் மல்லர்களுடனும் பாயிக் என்னும் காலாட்படை வீரர்களுடனுமே கலந்துகொண்டு பொழுதுபோக்குவதோடு அவர்கள் விஷயத்தில் ஏராளமாக ராஜ்ய பொக்கிஷத்திலிருந்து எடுத்துச் செலவிட்டுக்கொண்டு வந்தான். அக் காலத்தில் அருகிலுள்ள நாடுகளிலெல்லாம் ஐரோப்பியரிடமிருந்து புதிதாய்க் கற்றுக்கொண்ட பீரங்கியுத் தங்களில் காலாட்படைகளை அதிகமாக உபயோகப்படுத்துவதைக் கண்ட விக்ரமஜித் தன் சேனைகளையும் அந்த வழியிலேயே பழக்கிக்கொண்டு வர யத்தனித்தான் என்றாலும், இந்த வழக்கம் குதிரைப்படை வீரர்களாகிய ராஜபுத்ர வீரர்களுக்குப் பிடிக்கவில்லை. பதாதியில் சேருவது வெகு கேவலமென்றும் விழுந்தாலும் குதிரைமீதிருந்தபடியே சண்டைபோட்டு விழுவதே தங்கள் கௌரவத்திற்கேற்றதென்றும் அவர்கள் எண்ணினார்கள் இதனால் சித்தூர் நாட்டு ராஜபுத்ரர்களுக்குத் தங்கள் ராணாவின் மீது வெறுப்புண்டாகி நாட்டில் பல கக்ஷிகளும் அதனால் சண்டை சச்சரவுகளும் உண்டாயின. ராணாவின் சேனைகளில் ராஜபுத்ரர்கள் சேராமலிருந்ததால் அவன் இதர நாடுகளிலிருந்து ஆள்களை விலைக்கு வாங்கவேண்டியதாயிற்று. நாட்டிற்குச் சரியான பாதுகாப்பில்லை. சித்தூரிலும் அதற்கடுத்த ஊர்களிலு

முள்ள ஆடுமாடுகளெல்லாம் கொள்ளையடிக்கப்பட்டன. துரத்திச் செல்லுவதற்காக ராஜபுத்ர குதிரை வீரர்களைக் கூப்பிட்டால் அவர்கள் 'ராணு தனது பாயிக் பதாதிகளைக் கொண்டு மீட்டுக்கொள்ளட்டும்' என்று பதிலளித்துச் சும்மாவிருந்து விட்டார்கள்.

சித்தூர் இந் நிலைமையில் இருக்கிறதென்று கேள்விப்பட்ட குஜராத் அரசனாகிய பகதூர்ஷா என்பவன் இதுதான் சமயமென்று உடனே தனது சேனைகளுடனும் பீரங்கிகளுடனும் புறப்பட்டுச் சித்தூரின்மீது படையெடுத்து வந்துவிட்டான். இதைக் கேட்ட விக்ரமஜித்தும தன்னிடத்திலிருந்த ஆட்களைச் சேர்த்துக்கொண்டு வெகு தைரியமாய்ப் பகதூரை எதிர்த்துச்சென்றான். இவ் விஷயங்களெல்லாம் மீவார ராஜபுத்ரவீரர்களின் காதில் விழவே அவர்கள் திடுக்கிட்டுத் தங்களுக்குள் எது எப்படி இருந்தபோதிலும் தாங்கள் இப்போது ராணுவோடு சேர்ந்து எதிரியைத் துரத்தாமலிருந்தால் தங்களுடைய நாட்டிற்கே விபரீதம் வந்துவிடும் என்று மனத்திற் கொண்டனர். உடனே பக்கத்திலுள்ள சிற்றரசர்களெல்லாம் தங்களுடைய குதிரைப்படைகளைச் சீக்கிரமாய் திரட்டிக் கொண்டு வேகமாய் ராணுவின் உதவிக்குப் புறப்பட்டுப் போனார்கள். இதற்குள் பகதூர் சித்தூர்க்கோட்டையின் அடிவாரத்திற்கே வந்து மதில்களின் அடியில் வெடிவைக்க ஆரம்பித்துவிட்டான். வெடி மருந்தைக்கொண்டு கோட்டையைத் தகர்ப்பதற்காகச் சிறந்த ஐரோப்பியர்களைக் கொண்டுவந்ததாகவும் சொல்லுகிறார்கள். ராஜபுத்ரர் எவ்வளவுதான் தேர்ந்த குதிரைவீரர்களா யிருந்தும் என்ன பிரயோஜனம்? அப்போது வேண்டியதெல்லாம் வெடிமருந்தும்

பிரங்கி யனுபோகமும் காலாட்படைகளுமே. ஆகை யால் சித்தூர் மறுபடியும் நாசமாக வேண்டி யிருந்தது.

நிற்க, கோட்டைக்குள் இருந்தவர்களுள் ராணு ஸங்கன் மனைவியாகிய கர்ணுவதி தன் கைக்குழந்தை யாகிய உதயஸிங்கை எப்படித் தப்புவித்து ராஜகுலத் துக்குக் கேடுவராமல் காப்பது என்ற கவலையுள்ளவ ளாய் டில்லி யரசனாகிய ஹுமாயூனைத் தனது ராக்கி பந்தன சகோதரன் என்று கொண்டு அவன் தன் உதவிக்கு வருவதை எதிர்பார்த்திருந்தாள். ராக்கி பந்தனமாவது ராஜபுத்ரர்களுக்குள்ள ஒரு வஸந்த காலப் பண்டிகை வழக்கம். அப் பண்டிகை தினம் ராஜ புத்ரி தனது ராக்கி என்று சொல்லப்பட்ட வங்கி யாபரணத்தை எடுத்துத் தனக்கு யார் சுத்தவீரன் என்று தோன்றுகிறதோ அவனுக்குத் தனது சிற்றாள் அல்லது புரோகிதர் மூலமாக அதை அனுப்பி அவ் வீரனைத் தனது ராக்கிபந்தன சகோதரன் என்று கொள்ளுவாள். ராக்கி என்பது சுவர்ணுபரணமாகத் தான் இருக்கவேண்டு மென்பதில்லை. பட்டுக்கயிற் றினு லானதாயு மிருக்கலாம். அதன் பெருமை யெல் லாம் அனுப்புபவளுடைய மதிப்பைப் பொறுத்ததே யொழியக் கேவலம் அது என்னவிலை என்று எந்த ராஜபுத்ரனும் பார்க்கமாட்டான்; தனது வீரச் செயல் களை மெச்சி யனுப்பினதாகவே கருதுவதல்லாது வேறெந்தவிதமாகவும் கருதுவதில்லை. இதைக் கைக் கொண்டதும் அவ் வீரன் அந்த ராஜபுத்ரிக்கு நேரும் எந்த ஆபத்தினின்றும் அவளை மீட்டுவருவதாக மேற் போட்டுக்கொள்ளுவான். தன்வேலை வேறு எவ்வ ளவு இருந்த போதிலும் அதை நிறுத்திவிட்டு இப்படி

ஏற்றுக்கொண்டதை முதலில் கவனிப்பான். இதில் தன் உயிரையே தோற்கவேண்டி வந்தாலும் வரும். இதற்குப் பிரதியாக அந்த ராஜபுத்ரியிடமிருந்து யாதொன்றும் எதிர்பார்க்கமாட்டான். அவன் இவளைக் கண்ணெடுத்துப் பார்க்காமலுங்கூட இருக்கலாம். ராக்கிபர்தன சகோதரனாகிய அவ் வீரன் தான் ஏற்றுக் கொண்ட கடமையை எப்படியாகிலும் செய்து முடிப்பான். சஞ்சலப்படும் ராஜபுத்ரிக்காகப் பாடுபட்டு அவள் மானத்தைக் காப்பாற்றுவதே அவனுக்கு வெகு கௌரவத்தைத் தரக்கூடியது. இவ்வழக்கத்தைப்பற்றியே ராணி கர்ணவதியும் தன் குழந்தை உதயசிங்கைக் காப்பாற்றும்பொருட்டு ஹுமாயூனுக்குத் தனது ராக்கியை அனுப்பினாள்.

அவன் அப்பொழுது வங்காளத்தில் தனது சேனையை நடத்தி யுத்தம் செய்துகொண்டிருந்தான். இச் செய்தியைக் கேட்டவுடனே தானும் ஒரு ராஜபுத்ர சுத்தவீரனைப்போலவே நடந்துகொள்ளவேண்டுமென்று எண்ணம் கொண்டவனாய் உடனே தனது சேனைகளுடன் சித்தூரை நோக்கிப் புறப்பட்டான். பகதூர் ஸ்வஜாதியைச் சேர்ந்தவன் என்பதைக்கூட அவன் கவனித்ததாகத் தெரியவில்லை. ஆனால் அவன் சித்தூருக்கு வந்து பகதூரின் சேனைகளை விலக்குவதற்கு முன்னாலேயே அவ்வூர் ராஜபுத்ரர்களுக்கு விநாச காலம் நெருங்கிவிட்டது. ராஜபலி வேண்டுமென்று கேட்ட அந் நகர தேவதையைத் திருப்தி செய்வதற்காக ஒரு சிற்றரசன் பெருந் தைரியத்துடனும் தேசாபிமானத்துடனும் முன்வந்து சற்றுநேரம் ராஜபீடத்தில் உட்கார்ந்து, பேருக்காக ராணாவாகக் கொண்டாடப்பட்டு உடனே பலி கொடுக்கப்பட்டான். இத

னாலும் யாதொரு பிரயோஜனமும் காணப்படவில்லை. கோட்டையின் மதில்களெல்லாம் வெடிகுண்டினால் தகர்க்கப்பட்டன. உள்ளிருந்த ராஜபுத்ர வீரர்களனைவரும் தங்கள் மனைவிமக்களின் மானத்தைக் காக்கும் பொருட்டாக ஜோகர் என்னும் அக்கினிப்பிரவேச ஏற்பாடுகளை யெல்லாம் செய்துவிட்டுத் தாங்களும் ஆயுதபாணிகளாக எதிரியை நோக்கிச் சென்று அவர்கள்மீது தாக்கி விழுந்து மடிந்தார்கள். பெண்டிர்களெல்லாம் ராணி கர்ணவதியை முன்னிட்டுக் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த அந்த அக்னியை அணைந்து தங்கள் மானத்தைக் காத்துக்கொண்டனர். சித்தூர் விழுந்தது. முப்பத்திரண்டாயிரம் ராஜபுத்ரர் மாண்டனர். அவர்களுள் பதின்மூன்றுயிரம் ஜனங்கள் அக்கினிப்பிரவேசம் செய்த பெண்டிர்கள். நாசமாய்க் கிடந்த அக் கோட்டைக்குள் நுழைந்த பகதூர் சுற்றுமுற்றும் பார்த்துத் திடுக்கிட்டான். சித்தூர் விழுந்த பதினைந்து நாளைக்கெல்லாம் ஹுமாயூன் வந்து பகதூரையும் அவ்வூரிலிருந்த அவன் சேனைகளையும் துரத்திவிட்டான். பிறகு விக்ரமஜித்துக்குச் சொல்லியனுப்பி அவனை மறுபடியும் சித்தூர் ராணுவாக்கினான். விக்ரமஜித் மறுபடியும் தன்தேசத்துப் பிரபுக்களுடன் சண்டை போட்டுக்கொண்டதினால் உள்நாட்டுக் கலகம் உண்டாயிற்று. இதற்குள் கர்ணவதியின் குழந்தை உதயஸிங் முதலில் பூண்டியரசனிடம் ஒப்புவிக்கப்பட்டும் சித்தூரிலிருந்து பல இடங்களுக்குக் கொண்டு போகப்பட்டும் பல கை மாறியும் பல துன்பங்களினின்று மீட்கப்பட்டும் அநேக வருஷங்களாக இவன் இன்னானென்று தெரியாமலே வளர்ந்துவந்தான். கடைசியில் ராணு ஸங்கன் புத்ரனாகிய இவன் உயிரோடிருப்பதைக் கேட்டு

அநேக ராஜபுத்ர பிரபுக்கள் இவன்பக்ஷம் சேர்ந்து கொண்டார்கள். வர வர இவன் கக்ஷி பலக்கவே உதயஸிங் ராணுவாக்கப்பட்டான்.



## 8. அக்பரை எதிர்த்த வீரர்கள்



சித்தூரைப் போன்ற ராஜ்யத்தை ஆண்டு வருவதற்கேற்ற சாமர்த்தியம் உதயஸிங்குக்குக் கொஞ்சமேனும் இல்லை. ராஜபுத்ரர்களுக்கு இயல்பாயுள்ள வீரத்தன்மையும் அவனிடத்தில் இல்லை. மொகல் ராஜ்யத்திற்கு அதிபதியாகக் கிளம்பிக்கொண்டிருக்கும அக்பர் என்னும் இளஞ்சிங்கத்தின் கியாதி இந்தியா முழுவதும் பரவிக்கொண்டே வந்தது. அக்பர் எப்போது ராஜஸ்தானத்தின்மீது கண்ணைத் திருப்பினரோ அப்போதே சித்தூருக்குத் தலைதூக்க முடியாத விநாசகாலம் நெருங்கிவிட்டது. ராணு சற்றும் சக்தியில்லாதவன். சிததூரில் அநேக கக்ஷி பிரதிகக்ஷிகள் உண்டாயின.

சித்தூர் இந் நிலையிலிருக்க, அக்பருக்கு, கர்வங் கொண்ட ராஜபுத்ரர்களை அடக்கி ராஜபுதனம் முழுவதையும் தன் வசமாக்கிக் கொண்டு கியாதிபெற வேண்டுமென்கிற அவா உண்டாயிற்று. அக்பரோ சாமாந்ய மனிதரல்லர்; தம் பாட்டனுகிய பாபரைப் போலவே இளம்பிராயத்திலேயே பல கஷ்டங்களில் அடிபட்டவர். அவருடைய தகப்பன் தனது ராஜ்யத்தையெல்லாம் இழந்து நாட்டைவிட்டு ஓடிப் போய் திண்டாடிக்கொண் டிருக்கும்போது அக்பர்

பிறந்தார். தம்முடைய பன்னிரண்டாம் பிராயத்திலேயே தம் தகப்பன் சேனைகளை முன்னிட்டுக்கொண்டு வர்கிண்டில் நடந்த யுத்தத்தில் ஆப்கானியர்களைத் தோற்கடித்தார். பிறகு ஆறுவருஷத்திற்கெல்லாம் தம் தகப்பன் இறந்தபிறகு மொகலாய சக்ரவர்த்தியானார்.

இவர் ராஜபுதனத்திலுள்ள அரசர்களுக்குள் முக்யரான சித்தூர் ராணவை எதிர்த்துச் சென்றார். ராண சற்றும் கையாலாகாதவன். அக்பர் தன் கோட்டைக்கு முன்வந்து தங்கினர் என்னும் செய்தி காதில் விழுந்தவுடனே உதயஸிங் ஓட்டம் பிடித்து விட்டான். ஆனல் சிற்றரசர்கள் எல்லாரும் ராஜபுத்ர சுவாதீனத்தைக் காப்பதற்காகத் தங்கள் உடல் பொருள் ஆவியனைத்தையும் கொடுப்பதற்குத் தயாராக எப்போதும் போலவே இப்பொழுதும் முன் வந்து நின்றனர். சண்டன் வம்சத்தில் பிறந்த ஸஹிதாஸ் என்பவன் கோட்டையின் "சூரிய வாச" லிலேயே தன் ஆட்களோடு நின்றுகொண்டு சற்றும் நிலைகுலையாமலும் சிறிதும் மனந்தளராமலும் எதிரியை உள்ளே விடாமல் சண்டைபோட்டு மடிந்தான். அவனது இரத்தத்தினல் நனைந்திருந்த பாறையானது இன்னும் காணப்படுகிறது. பைதளா, கோட்டாரியோ, குவாலியர், தேவளா முதலிய நாட்டுச் சிற்றரசர்களெல்லாம் உண்மை ராஜபுத்திர வீரர்களாகவே தங்களுடைய புராதனக் கோட்டையாகிய சித்தூரைக் காப்பதற்காகத் தங்களுடைய உயிரைக் கொடுத்தனர். இதைக் கண்ட மற்ற ராஜபுத்ர வீரர்களும் மிகவும் வீராவேசம் கொண்டவர்களாய் முகம்மதியர்மீது தாக்கினர். எவ்வளவோ அழகிய ராஜ புத்ரிமார்

களும் கேடகங்களை எடுத்துத் தங்கள்மீது போட்டுக் கொண்டு எதிரியை வெகு துணிச்சலோடு தாக்கிச் சண்டையிலேயே மடிந்தனர். இப்பொழுது அக்ப ரோடு யுத்தத்திற்கு வந்த மீவார நாட்டுப் பதி னறு சிற்றரசர்களிலும் பெத்னூர் நாட்டு ஜயமாலையும் கைல்வா நாட்டுப் பத்தனையும் பற்றியே அக்பர் தம் கையெழுத்திலேயே புகழ்ந்து எழுதியிருக்கின்றார். இவர்கள் இருவரும் சித்தூர் ராஜவம்சத்தைச் சேர்ந் தவர்களே. இன்றைக்கும் இவர்களுடைய பெயரைக் கேட்டால் எந்த ராஜபுத்ர வீரனுக்கும் மயிர்க்குச் செறியும். பத்தனின் தகப்பன் சென்ற முற்றுகை நடந்தபொழுதே சண்டைக்குப் போய் மாண்டான். தாய்க்கு இவன் ஒரே பிள்ளையாயிருந்த போதும் அவள் தன் மகனுக்கு வீர உடை உடுத்துச் சித் தூரைக் காத்து மடியவேண்டுமென்றே அவனை இளம் பிராயம் முதற்கொண்டு வீரச்செயல்களில் பழக்கி வைத்தாள்.

ஸஹிதாஸ் "சூரிய வாச"லில் விழுந்தவுடனே பத்தன் அவனுக்குப் பதிலாகச் சேனைத்தலைவனானன். அப்பொழுது அவனுக்குப் பதினறு பிராயந்தான். வெகு கம்பீரமாய் எதிர்த்துச் செல்லுவதற்கு இதர ராஜபுத்ரர்களுக்கும் ஊக்கம் ஊட்டுவான். இவனை வீரத்தன்மையில் பழக்கி வைத்த தாயானவள் இவ னுக்கு முன்னல் ஆயுதபாணியாய்ப் புறப்பட்டு யுத்தத் திற்குப்போய்த் தைரியமாய்ப் போர்புரிந்து மாண் டாள். இதற்கும் மேலாக, இவனுக்கு விவாகம் செய்திருந்த சிறிய பெண்ணும் தன்னுடைய மிருது வான அழகிய கையில் ஈட்டியும் வாளுங்கொண்டவ ளாய்த் தன்னுடைய நேசக் கணவனுடனும் மாமி

யுடனும் நின்று யுத்தம் புரிந்து விழுந்து மடிந்தது மீவார நாட்டுச் சரித்திரத்தில் மனத்தை நிரம்ப உருக்கத்தக்க விஷயங்களுள் ஒன்றாகும். ராஜபுத்ரி மார்களே இவ்வளவு வீரத்தன்மையோடு யுத்தம் புரிய, அவர்களுடைய புருஷர்கள் தங்கள் உயிரைச் சற்றும் லக்ஷ்யம் செய்யாமல் போர்புரிந்தது ஓர் ஆச்சரிய மன்று. நடந்த மும்முரமான சண்டையில் பத்தனும் இறந்தான். உடனே ஜயமால் அவனிடத்தில் போய் நின்று சேனைத்தலைமையை வகித்து யுத்தத்தைக் கொஞ்சமேனும் நிறுத்தாமல் நடத்திக்கொண்டிருந் தான். ராஜபுத்ரச் சேனை வெகு சீக்கிரமாகக் குறுகிக் கொண்டு வந்தது. ஜயமாலும் மரணகாயப் பட்டான்.

உடனே ராஜபுத்ரப் பெண்டிர்களெல்லாம் தங் கள் மானத்தைக் காத்துக்கொள்ளும் பொருட்டு ஜோகர் என்னும் அக்கினிச் சடங்கை ஆரம்பித்தனர். எண்ணாயிரம் ஸ்திரீகள் கடைசியாகத் தாம்பூலம் வாங் கிக்கொண்டு அக்கினியை அணைந்து கொண்டார்கள். நூற்றுக்கணக்கான ராஜ வம்சத்தினரும் இவ்விதமே மாண்டு போனார்கள். கடைசியாக, சித்தூர் இடித் துத் தள்ளப்பட்டது. கோயில்களும் அரண்மனைக ளும் பொடிப் பொடியாக்கப்பட்டன. சித்தூரிலிருந்த ராஜ சின்னங்களெல்லாம் போயின. கோட்டையின் வாசல்களையும் படிகளையும் பிடுங்கி முகல் தலை நகருக்குக் கொண்டுபோய் விட்டார்கள். இதற்குப் பின்னால் சித்தூர் எப்போதும் தலையெடுக்காமல் ஒரே மட்டாய் அழிந்து போயிற்று. இருந்தபோதிலும் அந்த அழகிய நகரின் சுவாதீனத்துக்காகப் பாடுபட்ட ஜயமாலையும் பத்தனையும் பற்றி அக்பர் தமது மனத் தில் அதிக ஞாபகம் உள்ளவராய் அவர்களைக் கௌர

வப்படுத்தும் பொருட்டு டில்லியில் தமது அரண்மனை வாசலிலேயே இவர்களுடைய உருவச்சிலைகளை அமைப்பித்தார். சித்தூர் இங்ஙனம் அழியும்பொழுது உதயஸிங் ஹாராவலி மலைப் பள்ளத்தாக்கு ஒன்றில் மறைந்து கொண்டிருந்தான். இவன் இருந்த இடமே பின்னால் உதயபுரி என்றாயிற்று. இவ்வுதயபுரியே இன்னமும் மீவார நாட்டுத் தலைநகராய் விளங்குகிறது. அங்கேயே உதயஸிங்கின் புத்திரர்களுள் மஹாவீரரான பிரதாபஸிங் ராணா வானார்.

நிற்க, அக்பரின்கீழ் முகலாய ராஜ்யம் நாளுக்கு நாள் விஸ்தரித்துக் கொண்டு வரவே, அவருடைய கியாதி ராஜபுதன நாடுகளிலும் பரவிற்று. சித்தூர் அழிந்துபோன பிறகு, அந் நாட்டு அரசர்களெல்லாம் அவருடைய பராக்கிரமத்தை ஒப்புக்கொண்டு முகல் ஆளுகைக்கு உட்பட வேண்டியதாயிற்று. அப்படியன்றி அவருடைய அதிகாரத்தை மீறினால் சித்தூரின் கதி தங்களுக்கும் நேர்ந்துவிடுமென்று பயந்து ராஜபுதன அரசர், ஒருவர் பின் ஒருவராய், முகல் சக்ரவர்த்திக்குக் கீழ்ப்படிந்தனர். ஆனால் இப்படிக் கீழ்ப் படிந்த அரசர்கள் அக்பரால் மிகவும் கௌரவப் படுத்தப் பட்டார்கள். தம்முடைய முகம்மதிய சிற்றரசர்களுக்குச் சமானமாகவே இவர்களையும பாவித்து அக்பர் இவர்களுள் அநேகரை தம் சேனைத்தலைவர்களாக்கியும் இன்னும் பெரிய ராஜாங்க உத்தியோகஸ்தர்களாக்கியும் கௌரவப்படுத்தினர். இதனால் ராஜபுத்ரர்களுக்கேயன்றி அக்பருடைய ராஜ்பத்திற்கும் அநேக நன்மைகள் உண்டாயின. ராஜபுத்ரர் தங்களுடைய உள்நாட்டு சுவாதீனம் சற்றும் கெடாமல் இருந்ததோடு வெளியிலிருந்து வரும் படையெழுச்சி

அபாயங்களினின்றும் நீங்கினர். முகல் ராஜ்யத்திலும் இவர்களுக்குச் செல்வாக்கு ஏற்பட்டு, அக்பர் தம்முடைய பெருந்தன்மையையும், உதாரகுணத்தையும், பேரன்பையும் இவர்களிடம் காட்டி வந்ததனல் இவர்களுடைய பலமே முகல் ஸாம்ராஜ்யத்திற்கு வெகு ஸ்திரமான அஸ்திவாரமாயிற்று. இதனேடு நிற்காமல் இந்த வீரஜாதியாராகிய ராஜபுத்ரர்களைத் தம்மோடு இன்னும் நெருங்கச் சேர்க்கவேண்டுமென்கிற ஆசை கொண்டவராய் அவர் ராஜபுத்ர ராஜவம்சத்தினின்றும் மனைவிமார்களைக் கொண்டார். வர வர அநேக ராஜபுத்ர சிற்றரசர்களுக்கும் முகல் ராஜவம்சத்திற்கும் இப்படியே இரத்த சம்பந்தம் உண்டாயிற்று. ஆனல் உதயபுரியிலுள்ள மீவார ராஜ வம்சம் மாத்திரம் இவ்வித சம்பந்தம் யாதொன்றும் இல்லாமல் ஒதுங்கி நின்ற பெருமை யுடையதென்று ராஜஸ்தானத்தில் பலரும் கொண்டாடினர்.



## 9. ப்ரதாப ஸிங்



ப்ரதாப ஸிங் வெகு பிரபலமான மீவார நாட்டு அரசுரிமையைப் பெற்ருரென்ருலும், அதற்குத் தலைநகர் என்பதொன்றில்லை, திரவியமுமில்லை, சேனைகளுமில்லை; உறவினர்களும் சுயஜாதியாரும் பலனற்றுப் போய் மிகவும் ஊக்கந் தளர்ந்திருந்தார்கள். இருந்தபோதிலும் ராணவுக்கு மாத்திரம் அவர் வர்க்கத்துக்கே யுள்ள மனேதிடமும் மிடுக்கும் இருந்தது. சித்தூரை மறுபடியும் மீட்க முடியுமோ, தமது

வம்ச கௌரவத்தைத் திரும்பவும் நிலைநாட்டி அதன் பூர்வ பெருமைகளையும் அதிகாரங்களையும் திருப்பிக் கொண்டு வரமுடியுமோ என்கிற எண்ணங்களே அவர் மனத்தில் குடிகொண்டிருந்தன. தம்மை எதிர்த்து நிற்பவர்களின் பலத்தின் மகிமையையும் தம்முடைய பலமற்ற நிலையையும் நின்று கவனித்தா ரில்லை. தம் முன்னோருடைய சரித்திரங்களைப் படித்து அவர்களுடைய வீரச் செயல்களை அடிக்கடி நினைத்துக் கொள்ளுவார். தமக்கும் அதிர்ஷ்டம் வந்து டில்லி ஸிம்மாசனத்தை உருட்டித் தள்ளும்படியான திறன் தமக்கு ஏன் ஏற்படக்கூடாது என்று எண்ணிக் கொள்ளுவார். ஆனல் ராஜபுதன அரசர்களெல்லாம் வரவர முகல் சக்கரவர்த்தியின் வசப்பட்டு வரும் விதத்தைக் கண்டு மாத்திரம் அடிக்கடி மனே சஞ்சலம் அடைவார். மார்வார், ஆம்பர், பிக்கானிர், இந் நாட்டரசர்களெல்லாம் அக்பருக்குக் கீழ்ப்படிந்து விட்டனர். இதுவரையில் தமக்குச் சிநேகமாயிருந்த பூண்டியரசனும் அக்பரோடுபோய்ச் சேர்ந்துகொண்டான். தம் உடன் பிறந்த சகோதரனுகிய சாகாஜித் என்பவனுங்கூடத் தன்னைத் தள்ளிவிட்டு முகல் சக்ரவர்த்தியிடம் போய், சித்தூர் ராணுவென்னும் பட்டப் பெயரையும் அதற்குள்ள மரியாதைகளையும் பெற்று அவருக்குத் தலைவணங்கினன். இவ்வகை ஆபத்தான நிலைமைகளைப்பற்றிச் சிந்தனை செய்யச் செய்ய ப்ரதாபருக்குத் தமது வம்சப்பெருமையை எப்படியாவது கைவிடாமல் காக்கவேண்டுமென்கிற ஊக்கம் அதிகமாயிற்று. தாம் குடித்த தாய்ப்பாலின் மகிமையை உலகத்தார் அறியும்படி உழைப்பதாகச் சபதம் செய்தார். அவர் ஒருவராகவே நின்றுகொண்டு முகல் ஸாம்ராஜ்யத்தின் திறனையெல்லாம் இருபத்தைந்து

வருஷ காலம் ஆட்டிவைத்தார். ஒரு சமயம் முகல் சமவெளிகளின் மீது பாய்ந்து தொம்சம் செய்வதும் அடுத்த சமயத்தில் குன்றுகளையும் கற்பாங்குகளை யும் தாண்டி ஓடுவதுமா யிருப்பார். தம்மோடு கூடவே தங் குழந்தையாகிய அமரஸிங்கையும் காடு களின் இடையிலெல்லாம் இழுத்துச் சென்றும் மிரு கங்களின் மத்தியில் பழக்கிவைத்தும் வந்தார். பப்பா வம்சத்தில் பிறந்தவனும் தன்னைப் போன்ற வேறொரு மனுஷனிடம்போய்த் தலைவணங்குவனோ! அல்லது கேவலம் ஒரு டார்ட்டாரியனோடா சம்பந் தம் வைத்துக் கொள்வது? இதற்காக அவர் பட்ட பாடு என்ன! ஹாராவளி மலைப் பள்ளத்தாக்குகளில் அவருடைய பராக்கிரமத்தைப் பற்றி இன்னும் சொல் லிக்கொள்ளுகிறார்கள். அவருடைய சந்ததியாருக்கு அவர் செயல்களை யெல்லாம் கேட்கக் கேட்க மனம் உருகிக் கண்ணால் நீர் வழியும். ப்ரதாபர்க்கு உதவிக்கு வந்தவர்கள் தங்கள் வம்சப் பெருமையை விளக்கி நின்றார்கள். ஜயமால், பத்தன் இவர்களுடைய சந்த தியாரெல்லாம் இவர் பக்ஷம் வந்து நின்று தங்கள் உயிரையே கொடுத்தனர். சண்டன் வம்சத்தினரெல் லாம் முன்னிலும் இரண்டு பங்கான பக்தியுடன் இந்த ராஜ வம்சத்திற்காக உழைத்தார்கள். கைல்வாரா முதலிய பிராந்தியத் தலைவர்களெல்லாம் இவருடைய தனிமையையும் பழமையையுங் கண்டிரங்கி இவர் பக்ஷம் வந்து நெருங்கினார்கள். அவர்களுக்கும் தமக் கும் சித்தூரையும் அதன் பூர்வ பெருமையையும் திருப்பிக்கொண்டு வருவதற்கான திட சங்கல்பம் உண்டாகும்படி ப்ரதாபர் சில விரதங்களைக் கைக் கொண்டார். தன் காரியம் நிறைவேறும் வரையில்

யாதொரு விசேஷ போகமும் எந்தவிதமான ஆடம்பரமும் தமக்கு வேண்டாமென்று மறுத்துக்கொண்டு தம்முடைய சுவர்ண பாத்திரங்களையும் வெள்ளித் தட்டுகளையும் விட்டொழித்து சாதாரண இலையில் போஜனம் செய்வதும், க்ஷௌரம் செய்து கொள்ளாமல் தீகை்ஷ வளர்ப்பதும், தமது பஞ்சணைகளை யெல்லாம் விலக்கிவிட்டுப் புல்லடைத்த படுக்கையிலேயே சயனிப்பதும், தமது வாத்தியங்களெல்லாம் எப்பொழுதும் போலச் சேனைக்குமுன்னே செல்லாமல் பின்னாலேயே செல்லச் செய்வதும் ஆகிய இந்த நியமங்களை மேற்கொண்டார். இவைகளெல்லாம் இன்னும் மீவார நாட்டு ராணுவால் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. இதன் பொருட்டுத்தான் தற்போது உதயபுரி ராணு தாடி வைத்துக் கொள்வதும், போஜன பாத்திரங்களின் அடியில் இலைகள் போட்டுக்கொள்வதும், படுக்கையின் அடியில் கொஞ்சம் புல் தூவிவைப்பதும் வழக்கமாயிருக்கிறது.

ப்ரதாபர் அதிகாரத்துக்கு வந்ததும் கீழுள்ளவர்களையெல்லாம் ஒன்று சேர்த்து ஒரே மனத்தினராய் உழைக்க வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் கண்டிப்பாய்ச் செய்துவைத்தார். கோமல்மர் கோட்டையையே தமது இருப்பிடமாக வைத்துக் கொண்டு இன்னும் சில மலைக்கோட்டைகளைப் பழுதுபார்த்து அவைகளைப் பலப்படுத்தி வைத்துக்கொண்டார். மீவார சமவெளிகளில் யுத்தம் புரிய முடியாதென்று எண்ணித் தம் முன்னோருடைய வழக்கம் போலவே தம் ஆட்களை யெல்லாம் மலைப்பிராந்தியங்களிலேயே இருக்கும்படி உத்தரவிட்டார். சமவெளிகளில் பயிர் பச்சை ஒன்றும் காண முடியாது. ஆடுமாடுகளைக்

கூட அங்கே யாரும் கொண்டு போய் மேய்க்கக் கூடாது. பெரிய ரஸ்தாக்களிலெல்லாம் நிரம்ப முள் போட்டு வைக்கப்பட்டது. ஜனங்கள் குடியிருந்த இடங்களில் காட்டு மிருகங்கள் தாராளமாய்ப் போய்ச் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. இப்படியெல்லாம் தம் சமவெளிப் பிரதேசங்களை உபயோக மில்லாமல் செய்து வைத்துக்கொண்டால் தாம் எதிரியைச் சுலபமாய் வெருட்டி யடிக்கலாம் என்று அவர் நினைத்தார். சூரத் முதலிய துறைமுகங்களி லிருந்து, மூகல் பட்டணங்களுக்குக் கொண்டு போகப்படும் ஸாமான்களையெல்லாம் வழி மறித்துக் கொள்ளை யாடும் படியாகத் தமது ஆட்களை யனுப்பினார்.

இவற்றையெல்லாம் கேட்ட அக்பர் இந்த ராஜபுத்ரனை எப்படியாவது தொலைக்க வேண்டுமென்று தீர்மானித்து ஆஜ்மீருக்குப் புறப்பட்டு வந்து அங்கேயே தம்முடைய சேனைகளுடன் முகாம் போட்டுக் கொண்டார். ப்ரதாபர் அதிகாரத்துக்கு வந்து இரண்டு வருஷங்களாக மார்வார நாட்டு மால்தேவன் என்ற அரசன் அக்பரை எதிர்த்துப் பயன்படாமற் போகவே தானும் அம்பர் நாட்டரசனைப்போலத் தன் மகனைச் சக்ரவர்த்தியிடம் அனுப்பி அவருக்குத் தலை வணங்கினான். மால்தேவனுக்கு ராஜா என்னும் பட்டப் பேர் கொடுக்கப்பட்டது. உருவத்தில் அவன் அசாதாரணமாய்ப் பெருத்திருந்ததால் அவனை மோட்டா ராஜா என்றும் கூப்பிடுவதுண்டு. இவன்தான் முதல் முதல் ராஜபுத்ரர்களுக்குள் டார்ட்டாரியருக்குத் தன் மகளை விவாகம் செய்து கொடுத்தது: பின்னால் ஷாஜகானுக்குத் தாயாரான தன் மகள் ஜோதிபாயைக் கொடுத்து அதற்குப் பதிலாக வருஷம் இருநூறாயிரம்

பவுன் வரும்படியுள்ள நாலு மாகாணங்களைப் பெற்றுக் கொண்டான். மார்வார், அம்பர் நாடுகளை இப்படிச் செய்ய அநேக ராஜபுதனச் சிற்றரசர்கள் வேறு வழியில்லாமல் தங்களுடைய ஆட்களுடன் ஸாம்ராஜ்யத்திற் குட்பட்டு விட்டார்கள். ப்ரதாபருக்கு முகம்மதிய விரோதிகளைக் காட்டிலும் வாலிழந்த நரிகளாகிய இவ்வித ராஜபுத்ரச் சிற்றரசர்களே பலத்த சத்துருவாயினர். ஜாதி பரிசுத்தத்தை இழந்த ஒவ்வொருவனையும் வெறுத்து அவனுக்கும் தனக்குமுள்ள நட்பையும் துறந்தார். முகல் ராஜ்யம் அழிந்து போகும் வரையில் ப்ரதாபர் கொண்ட சபதத்தை அவர் வம்சத்தினரும் அநுஷ்டித்து வந்தனர்.

ஒரு தரம் அக்பருடைய முதல்தர சேனாதிபதிகளுள் ஒருவனும் அம்பர் நாட்டரசனுமாகிய ராஜா மான்ஸிங் என்பவன் தெற்கே போய்ச்சோளாப்பூரை ஜயித்துத் திரும்பி வரும்வழியில் கோமல்மர் கோட்டைக்குள் நுழைந்து ப்ரதாபரைப் பார்க்கப்போனான். அவன் வந்ததும் கோட்டைக்குள்ளிருந்தவர்கள் ததுந்தபடி அவனை வரவேற்றார்கள். அவனுக்காக ஒரு விருந்தும் ஏற்பாடாயிற்று. மான்ஸிங் போஜன சமயத்தில், ராணா வராமல் தம் மகன் அமரஸிங்கை அனுப்பியிருந்ததைக் கண்டு ஏன் ராணா இன்னும் வரவில்லை என்று கேட்டான். அதற்கு அமரஸிங் தன் தகப்பனுக்குத் தலைவலி என்றும் அவர் வராததை மன்னித்துத் தான்செய்யும் பணிவிடைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் பதில் அளிக்க, உடனே மான்ஸிங், "அவருடைய தலைவலி இன்னதென்று எனக்குத் தெரியும். ஏதோ நடந்தது நடந்து போய்விட்டது. அவரே இம் மாதிரி செய்தால்

என்ன நாம் செய்வது'' என்றான். இதைக் கேட்ட ராணு நேரிலே வந்து தான் மான்ஸிங்கோடுகூட இருந்து போஜனம் செய்யமுடியாததைக் குறித்து வருத்தப்பட்டு, "நீ துருக்கியரோடு சம்பந்தம் வைத்துக்கொண்டவனல்லவா, அவனேடுகூட உட்கார்ந்து சாப்பிட்டும் இருக்கலாம்'' என்று சொன்னர். உடனே மான்ஸிங் அவமானப்பட்டு போஜனத்தைத் தொடாமல் எழுந்திருந்து ராணுவைப் பார்த்து, "உங்களுடைய மானத்தைக் காப்பதற்காகவே நாங்கள் எங்களுடைய பெண்களைத் துருக்கியனுக்குக் கொடுத்துச் சம்பந்தம் பண்ணிக்கொண்டது. எத்தனைநாள்தான் நீ இந்த அபாயமான நிலையிலிருப்பாயோ, உன்னல் கூடிய மட்டில் பார். உன் கர்வத்தை அடக்காமற் போனுல் என் பெயர் மான்ஸிங் அன்று'' என, அதற்கு ப்ரதாபர் வெகு அமைதியாய், "நீ எப்பொழுது வந்தாலும் பார்க்கலாம்'' என்றார். இதற்குள் அருகிலிருந்த ஒருவன் மான்ஸிங்கைப் பார்த்து, "நீ வரும் போது உன் மாமனுகிய அக்பரையும் மறக்காமல் உன்னேடு கூட்டிக்கொண்டு வா'' என்றான். உடனே போஜனம் பரிமாறியிருந்த இடத்தைக் கங்கா தீர்த்தம் கொண்டுவந்து சுத்தி செய்தார்கள். ஜாதியைத் துறந்தவனைக் கண்ணெடுத்துப் பார்த்த பாபத்தினின்று நீங்குவதற்காக அங்கிருந்தவர்கள் எல்லாரும் மறுபடியும் ஸ்நானம் செய்து வேறு வஸ்திரம் தரித்துக் கொண்டார்கள். இவ் விஷயங்கள் ஒவ்வொன்றும் நடந்தது நடந்தபடியே விடாமல் முகல் சக்கரவர்த்தியாகிய அக்பர் காதிற்கு எட்டிற்று.

தன்னை இவ்வளவு தூரம் அலக்ஷ்யம் செய்த இந்த ப்ரதாபரின் கொட்டத்தை அடக்குவதற்காகத் தன்னு

டைய மூத்த குமாரனாகிய ஸலீமை அனுப்பி அவ னுக்குத் தகுந்த துணையாக மான்ஸிங்கையும் சாகரஜி யிகர் மகனாகிய மகபட்கான் என்பவனையும் சேர்த்து விடுத்தார். தம்மிடம் பக்தியுள்ள இருபத்திரண் டாயிரம் வீரர்களையும் தம் நாட்டுக் குன்றுகளையுமே ப்ரதாபர் தமக்கு உற்ற துணையாக நம்பியிருந்தார். தமது தலைநகருக்கு மேற்கேயுள்ள மலைப்பாங்கொன் றில் எண்பது மைல் நீளமும் அதே அகலமுமுள்ள ஓரிடத்தில் தம் ஆட்களோடு அமர்ந்து கொண்டார். அவ்விட முழுவதிலும் அடர்ந்த காடுகளும் பள்ளத் தாக்குகளும் அருவிகளுமாகவே இருந்தன. அங் கிருந்து சில கோட்டைகளுக்குச் செல்லும் பாதை களின் இருபுறத்திலும் உயர்ந்த செங்குத்தான பாறை கள் இருந்தன. ஒரே வண்டி செல்லக்கூடிய ஒடுக்கத்தினுள்ள அப் பாதைகளினின்று சில கிளைப் பாதைகள் பெரிய சேனைகளையே நிறுத்திவைக்கப் போதுமான விசாலமுள்ள சிற்சில இடங்களுக்குக் கொண்டுபோய் விடும். யாராலும் சுலபமாய்ச் செல்ல முடியாத ஹால்டிகாட் என்னும் இவ்விடத்தில்தான் சண்டை நடந்தது. அதன் மேற்பக்கத்திலும் அடி யிலும் ராஜபுத்ர வீரர்கள் நின்றுகொண்டனர். அங் கிருந்த சிகரங்களி லிருந்தும் உயர்ந்த பாறைகளின் உச்சிகளிலிருந்தும் ப்ரதாபரின் ஸ்நேகிதர்களாகிய பில் என்னும் மலைநாட்டார்கள் எதிரிகள் வரும்போது அவர்கள்மீது அம்புகளை விடுக்கவும் பெரும்பாறைகளை உருட்டித் தள்ளும்படியாகவும் தயாராய் நின்றனர். ப்ரதாபர் கணவாயின் தலைப்புறத்தில் தம்முடைய கைதேர்ந்த ஆட்களுடன் நின்றுகொண்டார். யுத்தம் ஆரம்பித்தது. கூட்டங் கூட்டமான ராஜபுத்ரர்கள்

முன் சென்று எதிரியைத் தாக்கினர். மான்ஸிங்கிடம் நேராகச் சென்று அவனுடன் கைகலக்க வேண்டு மென்ற எண்ணம் நிறைவேருமல் போகவே ப்ரதாபர் காலதாமதமில்லாமல் ஸலீம் இருந்த இடத்திற்கு வேக மாய்ச் சென்று யானைமேலிருந்த அந்த முகல் ராஜ குமாரனைத் தாக்கினர். அம்பாரிக்கு முன்னிருந்த ஒரு கனத்த இரும்புத் தகட்டினுல் ஸலீம் காப் பாற்றப் பட்டான். ஆனல் அந்த யானைப்பாகன் அடிபட்டு விழுந்தவுடனே அந்த மிருகம் மூர்க்கங் கொண்டு அடக்குவாரின்றி ஒரே ஓட்டமாய் ஓடிற்று. இந்த இடத்தில் வெகு மும்முரமான சண்டை நடந் தது. ராணுவின் சரீரத்தில் ஏழு இடங்களில் காயம் பட்டது. ஆனல் அவர் போகும் இடத்திற்கெல்லாம் தம்முடைய உன்னத ராஜகுடையையும் எடுத்துச் சென்றதனல், அவர் இருக்கும் இடத்தைச் சுலபமாகக் கண்டு கொண்டு ராஜபுத்ரவீரர்கள் அவரை ஆபத்தி னின்றும் விடுவிக்க நல்ல சமயத்தில் வந்து சேரு வார்கள்.

இவ்விதம் மூன்று தரம் மிகவும் ஆபத்தான நிலைமையினின்று தப்புவிக்கப்பட்டார். கடைசியாக ஒரு தரம் எதிரிகளால் நெருக்கமாய்ச் சூழப்படவே தப்பியோட மார்க்க மின்றித் திகைக்கும் சமயத்தில் மானு என்னும் ஒரு ராஜபுத்ரத்தலைவன் தன் வீரர்களு டன் உடனே ஓடி வந்து ராணு இருந்த இடத்தில் தான் அமர்ந்துகொண்டு அவரை விடுவித்தான். நின்ற இடத் திலேயே மானுவும் அவனுடைய ஆட்களும் தாங்கள் கீழே விழும் வரையில் தைரியமாய்ச் சண்டை புரிந் தார்கள். ராஜபுத்ரவீரர்கள் எவ்வளவு தைரியமாயிருந் தபோதிலும் பிரயோஜனப்படவில்லை. எதிரியினிடத்

திலோ ஏராளமான ஆட்களும் பீரங்கிகளும் இருந்தன. ஆகையால் ராணுவினுடைய இருபத்திரண்டாயிரம் வீரர்களுள் எண்ணுயிரம் பேர்தான் மிஞ்சினர்கள். ராணு தமது வெகு சாமர்த்தியமுள்ள சிடுக் என்னும் குதிரையின்மீது வெகு வேகமாய்த் துணை யாருமில்லாமல் தப்பி யோடிக்கொண் டிருந்தார். அவரைத் துரத்திக்கொண்டு இரண்டு முகல் தலைவர்கள் தொடர்ந்து பின்னலேயே வர, ஒரு மலைபருவியினிடம் வந்தவுடன் அவ்வருவியை சிடுக் ஒரேயடியாய்த் தாண்டித் தனது எஜமானனை வெகு வேகமாய்க் கொண்டு போயிற்று. அம் முகல் தலைவர்கள் சற்றுத் தாமதப்பட்டு மறுபடியும் துரத்தி ப்ரதாபரை நெருங்கி வந்துகொண்டிருக்கும்பொழுது தம்முடைய ராஜஸ்தானி பாஷையில், 'ஓ நீலக் குதிரையின்மீது சவாரி செய்பவனே' என்னும் வார்த்தைகள் பழகிய குரலோடு இவர் காதில் விழவே, அக் குரல் தன்னை விட்டு அக்பரைப் போய்ச் சேர்ந்து கொண்ட சுக்தா என்னும் தம்முடைய சொந்த சகோதரனுடையது என்பதைக் கண்டார். ப்ரதாபர் சேனை மத்தியிலிருந்து நீலக் குதிரையின் மீது யாரும் துணையின்றி ஓடிக்கொண்டிருப்பதைப் பார்த்து சற்று மனங்கலங்கி, தன்னுடைய சகோதரவாஞ்சை மேலிட்டு அவரைத் துரத்திக்கொண்டு போகின்றவர்களுடன் கூடவே ஓடி வந்து அவர்களின் மீது வாளை வீசிக் கீழே வீழ்த்திவிட்டுத் தனது சகோதரராகிய ப்ரதாபரைப் போய்க் கட்டியணைத்துக்கொண்டான். இவ்விடத்தில் வந்து சரேலென நிறுத்தப்படவும் சிடுக் கீழே விழுந்திறந்தது. அதன் ஞாபகத்தைக் குறித்து அது இறந்த இடத்தில் கட்டப்பட்ட மேடை இன்றும் காணப்படுகிறது. சுக்தா தன்னுடைய

அங்காரோ என்னும் குதிரையைத் தன் சகோதரனுக்குக் கொடுத்தான். அதிக நேரம் நின்று பேச அவகாசம் இல்லாதவனாய்ச் சுக்தா தான் சீக்கிரம் திரும்பி வந்து ப்ரதாபரைச் சேர்ந்து கொள்ளுவதாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டான். இவனது வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஸலீமிடம் போய்த் தன்கூட வந்தவர்களையும், அங்காரோ என்னும் குதிரையையும் ப்ரதாபன் கொன்றுவிட்டான் என்று சொன்னான். இவ் வார்த்தைகளில் ஸலீமுக்கு நம்பிக்கை ஏற்படாமல், "உண்மையைச் சொன்னால் உன் உயிரைக் காப்பாற்றுகிறேன். இல்லாவிட்டால் இப்போதே சிரச்சேதம் செய்துவிடுவேன்" என்று அதட்டவே, சுக்தா, "ஒரு ராஜ்யத்தின் க்ஷேமம் முழுவதுமே ப்ரதாபின் உயிரைப் பொறுத்திருப்பதால் இந்த மாதிரி நடந்துகொள்ள வேண்டியதாயிற்று" என்று உள்ளதைச் சொல்லிவிட்டான். ஸலீமும் தனது வாக்கை நிறைவேற்றிச் சுக்தாவை மன்னித்தான். ஆனால் அவன் தன் கீழ் உத்தியோகஸ்தனயிருக்கத் தகாதவன் என்று அவனைத் தள்ளிவிட்டான். உடனே சுக்தா உதயபுரிக்கு வந்து தன்னுடைய சகோதரனைச் சேர்ந்துகொண்டு அவரிடமிருந்து ஒரு ஜாகிரும் பெற்றுக்கொண்டான்.

ராணாவின் சொந்த ஜனங்களில் 500 பேருக்கு மேல் இச் சண்டையில் விழுந்து மடிந்தனர். குவாலியர் நாட்டு ராஜகுமாரனும் தன்னுடைய 150 ஆட்களுடன் வந்து உயிரை விட்டான். மானாவின் 150 வீரர்களும் விழுந்து மடிந்தார்கள். ஜயமடைந்த செருக்குடன் ஸலீம் மலைப்பாங்குகளினின்று திரும்பிப் போனான். பிறகு சில மாதங்கள் மாரிக்கால

மானபடியால் ப்ரதாபருக்குச் சற்று இளைப்பாற அவகாசம் கிடைத்தது. மழை கழிந்ததும் எதிரியும் திரும்பி வந்துவிட்டான். ப்ரதாபர் தமது கோமல்மர் கோட்டைக்குள் இருந்துகொண்டே முகம்மதியர்களை வரவொட்டாமல் வெகுதூரம் தடுத்துக் கொண்டு வந்தார். இப்படி இருக்கும் பொழுது அக்பரிடம்போய்ச் சேர்ந்துகொண்ட ஆபுநாட்டுத் தலைவன் ஒருவன் அக் கோட்டை ஜனங்கள் குடிக்கத் தண்ணீர் எடுக்கும் குளத்தை வஞ்சகமாய் விஷமிட்டுக் கெடுத்துவிட்டதனால் அவர் அங்கே நில்லாது மீவாரநாட்டின் தென் மேற்கேயுள்ள ஒரு மலைப் பாங்கினுள் போய் அமர்ந்து கொண்டார். இவர் புறப்பட்டுப் போன பிற்பாடும் அக் கோட்டையை எதிரிகள் பிடித்துக் கொள்ளும்வரையில் அநேக வீரர்கள் அங்கேயே யிருந்து போர்புரிந்து மடிந்தனர். ராஜா மான்ஸிங்கும் இன்னும் இரண்டு முகம்மதியத் தலைவர்களும் கோகுண்டா, உதயபுரி முதலிய கோட்டைகளைப் பிடித்துக்கொண்டு தெற்குப்புறமாய் வந்து இவர் இருக்கும் இடத்தையும் தாக்கினார்கள். இவர் ஒளிந்துகொண் டிருக்கும் இடங்களை யெல்லாங் கண்டு பிடித்துக்கொண்டு காட்டு மிருகங்களை வேட்டையாடுவதுபோல் இவரைத் துரத்திச் சென்றார்கள். ஆங்காங்கு ஒளிந்துகொண்டு தப்பி யோடிக்கொண் டிருக்கும்போதுகூடச் சிற்சில சமயங்களில் ஏதோ சில சைகைகளின்பேரில் இவருடைய ஆட்கள் இவரை வந்து சேர்ந்து கொள்ளுவார்கள். உடனே அவர்களைக் கூட்டிக்கொண்டு அருகிலுள்ள முகம்மதியர்களின்மீது திடீரென்று பாய்ந்து விடுவார். இம் மாதிரியான எதிரியுடன் ஒடியொளிந்து சண்டை

பிடிப்பதில் அலுத்துப் போனதினாலும் மாரிக்காலம் வந்து வெள்ளம் பெருகினதினாலும் முகம்மதியர்கள் இவ்விடத்தை விட்டுச் சம வெளிப்புறங்களுக்குப் பின் னோக்கிப் போகவேண்டியதாயிற்று. இம் மாதிரியாகவே அநேக வருஷகாலம் முகம்மதியர்களை எதிர்த்து நின்றதில் அவருடைய ஆட்களெல்லாம் நிரக் குறைந்துபோனதோடு அவருக்குப் பலவிதத்திலும் கஷ்டம் உண்டாயிற்று. அவர் தன்னந்தனியாக அலைந்து திரியவே, தம்முடைய குடும்பக் கவலை ஒரு பக்கம் அதிகரித்தது. எந்தச் சமயத்தில் அவர்களை எதிரிகள் கண்டுபிடித்துக் கைதியாக்கி விடுவார்களோ என்று பயந்து கொண்டிருந்தார். அவர் பயந்தபடியே ஒருதரம் இவ்வித ஆபத்திற்குள்ளாகும் சமயத்தில் இவரிடம் பக்தியாயுள்ள பில் என்னும் மலைநாட்டாரில் சிலர் இவருடைய மனைவிமக்களைக் கூட்டிக்கொண்டு போய்க் காப்பாற்றி வைத்தனர். மீவார தேசத்து ராணா வயிற்றில் பிறந்த குழந்தைகளானபடியால் அவர்களைக் காட்டுமிருகங்களினின்றும் தப்புவிப்பதற்காக இந்த ஏழை ஜாதியாரிடம் தொட்டில் முதலானவைகள் இல்லாததினால் அக் குழந்தைகளைத் தங்களுடைய பெரிய கூடைகளில் இட்டு மரக்கிளைகளிலிருந்து கயிற்றினால் உயரமாய்த் தொங்கவிட்டிருப்பார்கள். எவ்வளவுதான் கஷ்டம் வந்தபோதிலும் ராணாவின் மனோதிடம் மாத்திரம் தளரவில்லை. மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருந்த பொழுதும் தமது எளிய உணவைச் சுற்றிலுமுள்ளவர்களுக்குக் கொடுத்துத் தமது அனுஷ்டானங்களை விடாமற் செய்வார். இவருடைய கஷ்டகாலம் இன்னும் கொடியதாயிற்று. எந்த மலைக்குகைக்குப்

போனாலும் எப்பொழுதும் அபாயம் பின்தொடர்ந்தே வந்தது. ஆகாரம் கண்டுபிடிப்பதே வெகு கடினமாய் விட்டது; சமைத்து வைத்ததைச் சாப்பிடுவதற்குக்கூடச் சந்தர்ப்பப்படாமல் போய்விட்டதும் உண்டு. ஒரு தரம் இவருடைய மனைவியும் மருமகளும் அருகிலிருந்து கொண்டுவந்த தானியத்தைக் கொண்டு ரொட்டிதட்டி அவைகளை ஒவ்வொரு குழந்தைக்கு ஒவ்வொன்றாகக் கொடுத்ததில் ஒரு பாதி அப்போதைக்கும் மறுபாதி பிற்பாடு சாப்பிடுவதற்குமாக வைத்துக் கொண்டிருக்க, ப்ரதாபர் ஒருபுறம் நீட்டிப் படுத்துக்கொண்டு தமது கஷ்டங்களைப்பற்றிச் சிந்தனை செய்துகொண் டிருந்தார். அப்போது ஒரு குழந்தை ஊரக்கக் கூச்சலிட்டது அது என்னவென்று திரும்பிப் பார்த்தவர் ஒரு காட்டுப்பூனை வந்து அக் குழந்தையின் ரொட்டியைப் பிடுங்கிக் கொண்டு ஓடவே அது பசியினால் வருந்திக் கூக்குரலிட்டதெனத் தெரிந்து கொண்டார். இதுவரையிலும் மனந்தளராமல் இருந்த ப்ரதாபர் இப்போது தம்முடைய குழந்தைகளின் நிலைமையைக் கண்டு மிகவும் சோர்வடைந்து, 'இதற்கா நான் ராஜபுத்ரனாகப் பிறந்தேன்' என்று துக்கித்துத் தாம் படும் இவ்வித கஷ்டங்களைச் சற்றுத் தணிக்கமுடியாதா என்று அக்பருக்குக் கடிதம் எழுதி யனுப்பினார்.

இதனால் அக்பர், 'தன்னை இதுவரையில் எதிர்த்த ப்ரதாபன் தனக்கு இப்பொழுது கீழ்ப்படிந்து விட்டான்' என்று கொண்டு, தமது ராஜ்யம் முழுவதிலும் இவ் விஷயத்தைக் கொண்டாட வேண்டுமென்று கட்டளையிட்டுத் தமது அருகிலிருந்த பிருதிவி ராஜன் என்பவனிடம் இக் கடிதத்தைக் காண்பித்தார். அவன்

பிகானிர் ராஜகுமாரனுடைய சகோதரன். வேறு வழியில்லாமல் அக்பரிடம் வந்து சேரும்படியாய் நேர்ந்ததைக் குறித்து அடிக்கடி சிந்தனைசெய்து கொண்டிருப்பவன். இவன் பெரிய யுத்தவீரனாய் இருந்ததோடுகூடச் சிறந்த கவிவாணன் என்றும் பெயர் வாய்ந்தவன். ப்ரதாபன் என்னும் பெயர்கேட்டாலே அவன் எழுந்து மரியாதை செய்வான். அப்படியிருக்க அக்பருக்கு வந்த கடிதத்திலுள்ள செய்தியைக் கேட்டு விசனமுற்றவனாய், “ப்ரதாபர் எனக்கு நன்றாய்த் தெரியும். உம்முடைய கிரீடத்தைத் தூக்கிக்கொடுத்த போதிலும் அவர் உம்முடைய வசப்படமாட்டார். இக் கடிதம் அவரைக் கண்டு அருவைப்பட்ட யாரோ ஒருவனால் எழுதப்பட்டதேயொழிய வேறன்று” என்று சொல்லி இதன் உண்மையை அறியும் பொருட்டுத் தானே ப்ரதாபருக்கு நேராக ஒரு கடிதம் எழுதியனுப்ப அக்பரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டான். அக் கடிதத்தில் அவ்விதம் எழுதாமல் ப்ரதாபரைச் சற்றும் கீழ்ப்படியாமலிருக்கும்படி அடியில் வருமாறு எழுதினான்:— “இந்துக்களெல்லாம் தங்களுடைய இந்துத்தலைவனையே நம்பியிருக்கிறார்கள். இருந்த போதிலும் ராணா அவர்களைக் கைவிட்டு விடுவார்போல் தோன்றுகிறது. ப்ரதாபர் ஒருவர் மாத்திரம் இல்லாமற்போனால் அக்பர் எல்லாரையும் ஒரே மட்டத்தில் கொண்டுவந்து தள்ளியிருப்பார். ஏனென்றால் நமது தலைவர்களெல்லாம் திடனழிந்து போயினர்; நமது பெண்டிர்களெல்லாம் தமது பரிசுத்தத்தை இழந்தனர். அக்பர் எல்லாரையும் விலைக்கு வாங்கி விட்டார். ஆனால் உதயஸிங்கின் புத்திரனைமாத்திரம் அப்படி வாங்க முடிப்

வில்லை. ஏனென்றால் அவர் தம்மை ஒருகாலும் விற்றுக் கொள்ளமாட்டார். அநேகர் வேறு கதியில்லாமல் தங்கள் மானத்தைக் காத்துக்கொள்ளும் பொருட்டு இங்கு வந்து சேர்ந்தனர். ஹமீர் வம்சத்திற் பிறந்த ப்ரதாபர் மாத்திரம் இன்னும் காக்கப் பட்டிருக்கிறார். ப்ரதாபரின் ஸாமர்த்திய மெல்லாம் எங்கே மறைந்து கிடக்கிறது என்று உலகம் முழுவதும் கேட்கிறது. தமது வாளையும் மனோதிடத்தையுமே துணையாகக்கொண்டு க்ஷத்திரியச் செருக்கை இது வரையில் அவர் நிலைநாட்டியிருக்கிறார். இத்துருக்கிய தாகுக்காரன் எத்தனை நாள் தான் இருப்பான். ராஜபுத்ர பரிசுத்தத்தை நாடு முழுவதிலும் பரவச்செய்ய ப்ரதாபருக்கு ஒருகாலம் வரும். அதற்காக எல்லாரும் ப்ரதாபரையே எதிர்பார்க்கிறார்கள்.''

இக் கடிதத்தைப் படித்துப் பார்த்ததும் பத்தாயிரம் வீரர்களின் பலத்தைத் தாம் ஒருங்கே பெற்றவரைப்போல் தோன்றினர் ப்ரதாபர். சகலரும் தம்மையே எதிர் பார்த்துக்கொண் டிருக்கிறார்கள் என்பதைக் கேட்க அவருக்கு விசேஷமான மனோதிடம் உண்டாயிற்று. உடனே அவர் மீவாரத்தை விட்டுவிட்டுத் தம்முடைய குடும்பத்துடன் பாலை வனத்தைத் தாண்டி சிந்துநதிப் பிரதேசத்துக்குப் போவதற்காகப் புறப்பட்டார். ஹாராவளி மலையைவிட்டுக் கீழே இறங்கிவந்ததும் வெகுகாலமாய்ச் சித்தூர் ராணுக்களிடம் பரம்பரையாய் மந்திரியாயிருந்த ஒருவன் தானும் தன் முன்னோரும் சேர்த்து வைத்திருந்த திரவியம் முழுவதையும் ப்ரதாபரிடம் கொண்டுவந்து கொடுத்தான். அதனால் இருபத்தையாயிரம் ஜனங்களைப் பன்னிரண்டு வருஷகாலம் வைத்து உணவளிச்

கலாம். இதைக் கொண்டு ப்ரதாபர் மறுபடியும் தம்முடைய ஆட்களைச் சேர்க்க ஆரம்பித்தார். எதிரிகள் இவர் எங்கேயோ வனாந்தரத்துக்குத் தப்பியோடுகிறார் என்று எண்ணிக்கொண்டிருக்க, ப்ரதாபர் திடீரென்று முகம்மதியர்களின்மீது பாய்ந்து அவர்களைப் பல இடங்களில் தோற்கடித்துக் கோமல்மூர் முதலிய பல கோட்டைகளைத் திரும்பவும் தம் வசமாக்கிக் கொண்டார். தம்மை வெருட்டிய மான்ஸிங்குக்குத் தமது வலிமை சற்றுத் தெரியும்படியாக அவனுடைய அம்பர் நாட்டின்மீது படையெடுத்துச் சென்று ஆங்குள்ள முக்கிய வியாபாரஸ்தலமாகிய மால்புரம் என்ற இடத்தைத் தொம்ஸம் செய்தார்.

பிற்க, அக்பர் தென்னிந்தியாவுக்குப்போய் யுத்தம் புரியவேண்டியிருந்ததாலும் மீவாரக் கோட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாக ப்ரதாபரின் வசப்பட்டு வந்ததனாலும், உதயபுரியும் சீக்கிரமாக விழுந்தது. உடனே ப்ரதாபர் தமது ஊரில் வந்து அமர்ந்து கொண்டார். இன்னும் அவருக்கு மன அமைதி ஏற்படவில்லை. சித்தூர் இன்னும் மீட்கப்படவில்லை. கேவலம் முகம்மதியனுடைய தயவையன்றோ இன்னும் எதிர்பார்க்கவேண்டி இருக்கிறது என்று அடிக்கடி சங்கடப்படுவார். அவருக்குத் தம் எதிரியோடு சண்டைபோடுவதைவிட அவர்களின் தயவிற் காளாவது மிகவும் பொறுக்க முடியாமலிருந்தது. இந்த மனோவியாதி அவரைப் பீடித்து அவரை வீழ்த்துவதற்கும் காரணமாயிற்று.

இவருடைய கடைசிக் காலத்தைக் கவனித்தால் மிகவும் உருக்கமா யிருக்கும். இது வரையில் அவரோடு கூடவே நின்று உழைத்து வந்த சில ராஜ

புத்ரத் தலைவர்கள் அவரைச் சுற்றிலும் இருக்க, ப்ரதாபர் மிகவும் அவஸ்தைப்படுவதைக் கண்டு அவர்களுள் ஒருவன் அருகிற் சென்று, "என் வருத்தப்படுகிறீர், உம்முடைய மனத்திற்கு என்ன கவலை?" என்று கேட்க அதற்கு அவர் தம்முடைய மரணாவஸ்தையை யெல்லாம் பொறுத்துக்கொண்டு பின் வருமாறு சொன்னார்:— "துருக்கியர்களுக்கு நமது நாட்டை ஒருகாலும் விடமாட்டோம் என்னும் பிரதிக்ஞையை உங்களிடமிருந்து கேட்பதற்காகவே இந்த ஆத்மா இன்னும் இச் சரீரத்தி லிருந்துகொண்டு துடிக்கிறது. எனது மகன் அமரன் தனது சரீர சுகத்தையே முதலில் கவனிப்பானே யொழியத் தனது தேசத்தின் குறைகளை மனத்தில் வைத்திருப்பானோ என்று சந்தேகிக்கிறேன். ஒரு தரம் நாங்கள் மாரிக் காலத்தில் பெஷோர்தா நதிக்கரையில் போட்டிருந்த தாழ்ந்த குடிசைக்குள் அமரன் ஒரு நாள் நுழையும் போது அவனுடைய தலைப்பாகையானது அப் பந்தலின் மூங்கிலில் சிக்கி இழுக்கப்படவே அவனுக்கு வெகு கோபம் வந்துவிட்டது. அதைப் பொறுக்க முடியாதவனுக்குத் தேசத்துக்காக உழைத்து அதற்குள்ள கஷ்டங்களைப் பொறுக்க எப்படி முடியும். இப்போது அரண்மனைக்கு வந்து நமது சுதந்தரத்தை இவ்வளவு தூரம் வென்ற பிற்பாடு சுக போகங்களையே தேடச் சொல்லும். என் வீரர்களே, நீங்களும் அவனைப் போலவேதான் இருந்துவிடுவீர்களல்லவா?" என்று சொன்னார்.

உடனே அவ் வீரர்க ளெல்லாம் ப்ரதாபரின் முன்வந்து நின்றுகொண்டு மீவார நாட்டுச் சுதந்தரம் முற்றிலும் மீட்டாலன்றித் தாங்கள் மாளிகை கட்டுவ

தில்லை என்று தெய்வத்தின் மீது ஆணையிட்டுச் சபதம் செய்து கொண்டார்கள். அதைக் கேட்டதும் அவருடைய பிராணன் அமைதியாய்ச் சரீரத்தை விட்டுப் போயிற்று. சிசோதையர்களால் தெய்வம்போல் கொண்டாடப்பட்ட ப்ரதாபரின் காலம் இவ்வாறு முடிந்தது.



## 10. அமர ஸிங்



ப்ரதாபருக்குப் பிறகு எட்டு வருஷ காலம் அக்பர் இருந்தார். அவர் இருக்குமளவும் அமரஸிங்குக்கு யாதொரு கஷ்டமும் ஏற்படவில்லை. தன் கீழுள்ள தலைவர்களோடு புதிய நிலத்தீர்வை முதலிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டும் அதற்கு வேண்டிய சட்ட திட்டங்களைச் சரிவர நியமித்துக்கொண்டுமிருந்தார். ஏரிகரையில் கட்டப்பட்டதோர் அழகான அரண்மனையில் வெகு சுகமாக வாழ்ந்துகொண்டு வந்தார். அக்பர் காலத்துக்குப்பிறகு அவரது மகனாகிய ஜிஹாங்கிர் பட்டத்திற்கு வந்து நான்கு வருஷத்திற்கெல்லாம் இன்னமும் தலைவணங்காத இந்த மீவார அரசனை அடக்கவேண்டுமென்கிற எண்ணங்கொண்டான். தன் தகப்பன் பயந்தாற்போலவே, அமரஸிங் சுகஜீவனத்தில் அமர்ந்துகொண்டு தன்னை ஸ்தோத்திரம் செய்யும் சில சோம்பேறிச் சிநேகிதர்களுடன் இது வரையில் காலங்கழித்து வந்தான். ப்ரதாபரிடம் சபதம் செய்து கொண்ட வீரர்களும் அவர்களுடைய வம்சத்தினரும் வரும் அபாயம் இன்னதென்று அறிந்துகொண்டு, ராணாவிடம் ஓடி வந்து, அவரது தகப்பனார்

தமது மரணகாலத்தில் இட்ட கட்டளையையும் அப்பொழுது தாங்கள் செய்த சபதத்தையும் நிறைவேற்றி ராஜபுத்ரர்களின் கீர்த்தியையும் சுதந்தரத்தையும் நிலை நாட்டவேண்டுமென்று எவ்வளவு சொல்லியும் ராணு அசையவேயில்லை. இவ்வாறு தாங்கள் கேட்டுக் கொண்டதெல்லாம் பயன்படாமற் போகவே அங்கிருந்த ஸலம்ப்ர ராஜபுத்ரத் தலைவன் மிகவும் ரோஷங் கொண்டு எழுந்து நின்று, ராணுவை ஆசனத்திலிருந்து கையைப் பிடித்திழுத்து, "தலைவர்களே, குதிரையின் மீது ஏறுங்கள். ப்ரதாபரின் மகனுக்கு அபகீர்த்தி வாராமல் காக்கவேண்டும்" என்று கூக்குரலிட்டான். இங்ஙனம் பலவந்தமாய்க் குதிரையின் மீது ஏற்றப் படவே ராணு அவன் மீது கோபங்கொண்டவனுய் அவனை ராஜத் துரோகி என்று பல முறை திட்டினுன். அவன் சொல்லுவதை யாரும் கவனியாமல் நேராக எல்லாரும் மலையினின்று கீழே இறங்கி வந்தார்கள். ஜகந்நாத ஸ்வாமி கோவிலிடம் வந்தவுடன் ராணு தன் கண்களில் நீர் ததும்ப தன்னைப் பிடித்திழுத்த ஸலம்ப்ரத் தலைவனைப் பார்த்து தன் தகப்பன் சிநேகிதனை இவ்வளவு தூரம் அலக்ஷியம் செய்ததை மன்னிக்க வேண்டுமென்றும் தங்களையெல்லாம் அவனே முன்னின்று நடத்திச் செல்லவேண்டு மென்றும் கேட்டுக்கொண்டான். சேனைகளுடன் கணவாயைக் கடந்தவுடனே முகம்மதியர்கள் எதிர்ப்பட்டு அங்கே நடந்த சண்டையில் ராஜபுத்ரர்களே ஜயித்தனர். பின்னும் ஒரு மாதத்திற் கெல்லாம் நடந்த மற்றொரு சண்டையிலும் முகம்மதியர் தோற்றுப் போயினர். திரும்பவும் மீவார நாட்டுக்கு நல்ல காலம் வந்தது. இதையெல்லாங் கேட்ட ஜிஹாங்கிர் மறுபடியும் புதிதான

பிரயத்தனங்களைச் செய்ய ஆரம்பித்தான். ஒரு ராஜ புத்ரனைப் புதிதாகச் சித்தூர் ராணுவாக்கினால் அநேக ராஜபுதன அரசர்கள் அவனிடம் போய்ச் சேருவார்கள்; இதனால் அமரஸிங்கின் பலம் பிளவுபடும் என்ற எண்ணங் கொண்டவனாய் சக்ரா என்னும் ஒரு ராஜ புத்ரனை முகல் சேனையுடன் சித்தூருக்கு அனுப்பினான். இவன் முதலில் ப்ரதாபரிடம் இருந்து பிறகு அக்பரைப் போய்ச் சேர்ந்து கொண்டவன். எழு வருஷகாலம் இடிந்துபோன சித்தூர்க் கோட்டைக் குள் இருந்தான். பல ராஜபுத்ரத் தலைவர்கள் இவனிடம் வந்து வணங்கிச் சென்றபோதிலும் அவர்கள் பலவந்தத்தினா லன்றி உண்மையில் தனக்குக் கீழ்ப் படிந்தவர்க ளல்லர் என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டதோடுகூட அவர்களுடைய தேசாபிமானத் தையும் வீரத்தன்மையையும் கண்டு வியந்தான். தன்னைச் சுற்றிலுமுள்ள விழுந்த கட்டடங்களையும் இடிந்த கோட்டைகளையும் பார்க்கப் பார்க்க தன் முன்னோர்கள் நாட்டின் சுதந்தரத்துக்காகத் தங்களுடைய உயிரையே கொடுத்த இடத்தில் தான் வந்து நின்று கொண்டு அதே நிலத்தைத் தருக்கிய அரசனிடம் யாசகமாகப் பெற்று வாழ்கின்ற தனது கேவலமான வாழ்வை நினைத்து மிகவும் வெட்கமடைந்து ஒருநாள் அமரஸிங்கைக் கூப்பிட்டு அவனிடம் சித்தூர்க் கோட்டையைக் கொடுத்துவிட்டு தான் ரின்தாம்பூர் என்னும் இடத்தில் வசித்து வந்தான். கொஞ்சக்காலத்துக்குப் பிறகு இச் செய்தியைக் கேட்ட ஜிஹாங்கிர் இவனைத் தன்னிடம் வரவழைத்து 'ஏன் இப்படிச் செய்தாய்?' என்று கேட்க, இவன் உடனே அவர் முன்னே சென்று நின்றுகொண்டு தனது வாளையுந

வித் தன்னைத்தானே குத்திக் கொண்டு சக்ரவர்த்தி யின் முன்னிலையிலே விழுந்து இறந்தான்.

சித்தூர் நகர்க்கு வந்ததும் இதர கோட்டைகளும் ஒன்றன்பின் ஒன்றாக ராணாவின் வசப்பட்டன. அவைகளுள் ஒந்தலம் என்னும் கோட்டையை ராஜ புத்ரர்கள் முற்றுகை போட்டுப் பிடித்துக்கொண்ட விதம் இங்கே கவனிக்கத்தக்கது. இதுவரையில் ராணாவின் சேனையை முன்னிட்டுச் செல்லும் கௌரவ மானது சண்டன் வம்சத்தினராகிய சண்டாவத ராஜ புத்ரரைச் சேர்ந்ததாகவே இருக்க இப்போது புதி தாகச் சுக்தன் வம்சத்தின ராகிய சுக்தாவதர்கள் அந்தக் கௌரவம் தங்களைச் சேரவேண்டியதென்று போட்டிபோட்டார்கள். இவ்விரு திறத்தாரும் இதற் காகத் தங்களுடைய வாளை யுருவி ஒருவரை யொருவர் எதிர்த்துச்செல்லும் சமயத்தில் இதைக் கேட்ட ராணா இவர்களுடைய வழக்கை ஒருவாறு தீர்த்துவைக்கும் பொருட்டு அப்போது முகம்மதியர் வசமிருந்த ஒந் தலம் என்னும் கோட்டையை எதிர்த்துச்சென்று அதற்குள் யார் முதலில் நுழைகிறார்களோ அவர் களே நமது சேனைக்கு முன் செல்ல யோக்யதை யுடையவர்கள் என்று சொல்ல, உடனே இவ்விரண்டு கக்ஷியாரும் ஒன்றாகச் சேர்ந்து நேராய் ஒந்தலத் துக்கு விரைந்து புறப்பட்டனர். அங்குள்ள முகம்ம தியர்கள் இவர்களை எதிர்க்கத் தயாராயில்லை. சுக்தா வதர்கள் முன்னால் ஓடிவந்து கோட்டையின் வாசலை உடைத்துச் செல்லப் பிரயத்தனப் பட்டுக்கொண் டிருந்தனர். சண்டாவதர்களோ நடுவில் வழிதப்பிப் போய்ச் சற்றுநேரம் திகைத்துப்பிறகு அங்குள்ள ஒரு இடைப்பையனுடைய உதவியினால் கோட்டையின்

பின்புறம் வந்து சேர்ந்தார்கள். இன்னும் சுக்தாவதர்கள் வாசலை இடித்துக் கொண்டிருப்பதைக் கேள்விப்பட்டு தாங்கள் முன் யோசனையுடன் கொண்டுவந்திருந்த ஏணிகளை மதில்களின்மீது சார்த்தினதும் இவர்களுடைய தலைவன் மேலே ஏறினான்; ஆனால் கோட்டைக்குளிருந்து வந்த ஒரு குண்டினால் அடிபட்டுக் கீழே விழுந்து விட்டான். உடனே மற்றொருவன் விழுந்தவனை எடுத்து வஸ்திரத்தால் தன் முதுகில் கட்டிக்கொண்டு மதில் மீதேறி உட்புறம் குதிக்கவே அவன் பின்னுள்ளோர் எல்லோரும் ஒருவன்பின் ஒருவனாக அம் மாதிரியாகவே குதித்து அங்குள்ள முகம்மதியர்களைத் தாக்கிக்கொண்டும் ஜயம் சண்டாவதற்களுக்கேயென்று கூச்சலிட்டுக்கொண்டு மிருந்தார்கள். அச்சமயம் சுக்தாவதர்களின் தலைவன் தனது யானையைக்கொண்டு கோட்டை வாசலைத் திறப்பதற்குச் செய்த பிரயத்தனங்களெல்லாம் வீணாய்ப்போகவே, சண்டாவதர்கள் கோட்டைக்கருகில் வந்து விட்டார்கள் என்பதையும் கேட்டான். உடனே தனது யானையினின்றும் இறங்கி வந்து பார்த்ததில் கதவுகளில் பெரிய இரும்பாணிகள் நீட்டிக்கொண்டிருந்ததால் அவைகளின்மீது காலை வைத்துத் தள்ள முடியாமலிருந்ததைக் கண்டு தான் சரேலெனக் கதவினிடம் சென்று அவ்வாணிகளி னிடையில் தன்னுடைய சரீரத்தைக்கொடுத்து யானையைத் தன்மேல் முட்டவிடும்படியாக உத்தரவு கொடுத்தான். அப்படியே யானை வந்து இவன் சரீரத்தின்மீது முட்டித்தள்ளவே கதவும் உடைந்து போயிற்று. இங்ஙனம் மாண்டுபோன தங்களுடைய தலைவனைக் கடந்து உள்ளே சென்று பார்க்கவே சண்டாவதர்கள் இவர்களுக்கு முன்னமே கோட்

டைக்குள் வந்து நின்றுகொண்டு முகம்மதியர்களோடு மும்முரமாய்ச் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். சுக்தாவதர்களும் வந்து நெருங்கவே எதிரிகள் சீக்கிரம் தோற்கடிக்கப்பட்டனர். கோட்டை ராஜபுத்ரர் வசமாய்விட்டது. சண்டாவதர்களே ராணுவின் சேனையின் முற்செல்லும் கௌரவத்தைப் பெற்றனர்.

இந்தச் சந்தர்ப்பத்தில் சுக்தாவதர்கள் யாவர், அவர்கள் எப்படிப் பிராபல்லிய மடைந்தனர் என்பதைப்பற்றிச் சற்று கவனிக்க வேண்டும். உதயஸிங்கின் இருபத்து நாலு புத்ரர்களுள் சுக்தா இரண்டாவது புத்திரன். அவன் ஐந்தாம் பிராயத்திலேயே தனது வீரத்தன்மையைக் காட்டினான். ஒரு நாள் ஆயுதக்காரன் ஒரு புதிய வாளைக் கொண்டுவர ராணு அதன் முனையைப் பரிக்ஷிப்பதற்காக வழக்கம் போலக் கொஞ்சம் பஞ்சு கொண்டுவரக் கட்டளையிட்டார். உடனே இச் சிறுவன் தனது தகப்பனைப் பார்த்து இது சதையையும் எலும்பையும் வெட்டுமா என்று சொல்லிக்கொண்டே அவ் வாளைப் பிடுங்கிக்கொண்டு அதைத் தன் கையின்மீது பரிக்ஷித்தான். கையிலிருந்து ஏராளமான ரத்தம் பெருகிக் கீழிருந்த கம்பள மெல்லாம் நனைந்துபோயும் இச் சிறுவன் அதைக் கண்டு யாதொரு பயமுமில்லாமல் தான் செய்துகொண்ட காயத்தினால் சற்றும் ஆபாசப்படாமல் வெகு அலக்ஷியமாயிருந்து விட்டான். உதயஸிங் சோதிடர்களைக் கூப்பிட்டு இவனுடைய ஜாதகத்தைப் பார்த்ததில் இவன் மீவார நாட்டிற்குக் கேடுவிளைப்பான் என்று அவர்கள் சொல்ல, இச் சிறுவனைச் சிரத்சேதம் பண்ணிவிடும்படியான கட்டளை பிறந்தது. அதற்காக இவனைச்

கொண்டுபோகும் வழியில் சலம்ப்ர ராஜபுத்ரத்தலை வன் இவர்களைச் சந்தித்துச் செய்தியைக் கேள்விப் பட்டு, உடனே ராணவிடம் ஓடிப்போய் தனக்குப் புத்திரன் இல்லாமையால் இச்சிறுவனைத் தான் வளர்த்து வைத்துக்கொள்ள வேண்டுமென்கிறதைச் சொல்லி வெகுநேரம் இரந்ததின்மேல் அனுமதியும் கொடுக்கப்பட்டது. அத் தலைவனுக்கு வயோதிகத் தில் குழந்தைகள் பிறந்தன. அப்பொழுது அவன் இதுவரையில் தான் வளர்த்துவந்த சுக்தனைப்பற்றி விசாரப்பட்டுக் கொண்டிருக்கையில், ப்ரதாபர் சுக் தாவுக்குச் சொல்லி யனுப்ப இருவரும் கொஞ்ச காலம் நேசமாய்ச் சேர்ந்திருந்தனர். ஒருநாள் இருவரும் வேட்டைக்குச் சென்றிருந்த பொழுது ஏதோ இவர்களுக்குள் வித்தியாசம் ஏற்பட்டு அதைக் கைச்சண்டையினல் தீர்த்துக் கொள்ளலாமென்று தீர்மானித்துக் கொண்டார்கள். இருவரும் கைகலக்க விருந்த சமயத்தில் அவர்களுடைய புரோகிதர் ஓடி வந்து அநியாயமாய் ராஜவம்சத்துக்கே கேடு விளை விக்கும் இச் சண்டையை நிறுத்த வேண்டுமென்று என்ன சொன்னபோதிலும் இவர்கள் காதில் போட் டுக்கொள்ளாமல் இருந்ததைக் கண்டு, அவர் கடைசி யாக இதைத் தடுப்பதற்கு ஒரே உபாயந்தான் இருக் கிறது என்று சொல்லித் தனது வாளை உருவித் தன் னுடைய மார்பில் குத்திக்கொண்டு இவர்களின் இடை யில் பிரேதமாய் விழுந்தார். தங்களுடைய புரோகி தரைக் கொன்ற பாபத்திற் காளானதைக் கண்டு இரு வரும் துக்கித்து உடனே தங்களுடைய சண்டையை நிறுத்தினர்கள். ப்ரதாபர் சுக்தாவைத் தமது நாட் டைவிட்டுப் போய்விடும்படி கட்டளையிடவே அவன்

கோபத்தினால் அக்பரிடம் போய்ச் சேர்ந்து கொண்டான். இதற்குப் பிறகு ஹால்டிகாட் என்னும் இடத்துச் சண்டையில் இரண்டு சகோதரரும் சேர்ந்து கொள்ளுவதற்குமுன் ஒருவரை யொருவர் பார்க்கவில்லை. சுக்தாவின் காலத்துக்குப் பிறகு அவனுடைய பதினெரு பிள்ளைகளும் தங்களுடைய பிதிரார்ஜித நிலம் போதாமையால் அங்குமிங்கும் அலைந்து திரிந்துகொண் டிருந்தார்கள். அமரஸிங் இவர்களை யெல்லாம் ஒன்றுசேர்த்து ஒந்தலம் என்னும் கோட்டையைப் பிடிப்பதற்கு அனுப்பினான். அதன்பிறகு அவர்களுக்குப் போதுமானவளவு ஆஸ்தியும் கொடுக்கப்பட்டது. பின்னல் இவர்கள் எப்பொழுதும் பத்தாயிரம் பேருக்குக் குறையில்லாமல் சேர்த்துக் கொண்டு ராணாவின் உதவிக்குச் செல்லத் தயாராயிருந்தார்கள்.

இவ்வகையான வீரர்களைக் கொண்டுதான் அமரஸிங் முகல் சக்ரவர்த்தியின் சேனைகளைப் பல இடங்களில் தீர முறி யடித்தது. ஆனால் இதுவரையில் கொண்ட ஜயமெல்லாம் சுலபமாய்க் கிடைத்தவைகளல்ல. ப்ரதாபரின் காலத்துக்குப் பிறகு பதினேழு இடங்களில் முகல் சேனைகளோடு நின்று சண்டை போடப்பட்டது. இவை ஒவ்வொன்றிலும் மீவாரத்தில் கைதேர்ந்தவர்களைக் குவியல் குவியல்களாகத் தோற்க வேண்டியதாயிற்று. குறைந்த சேனைகளை நிரப்புவதற்கு ஆட்களில்லை. இறந்த வீரர்களின் வம்சத்துச் சிறுவர்களைப் பழக்கி வைக்கவும் அவகாசமில்லை. ஆகவே ராணாவின் பலமெல்லாம் வரவர வெகு கேவலமாய் ஒடுங்கிப் போயிற்று. முகல் சேனைகளோ அப்போதைக்கப்போது பலப்படுத்தப்பட்

டது; கடைசியில் சக்ரவர்த்தியின் மகனிடம் அனுப்பப்பட்ட சேனையானது முன்னிலும் பதின்மடங்கு அதிகமாயிருந்தது. இப்பொழுது ராணுவிடம் இருந்த ஆட்களைக் கைவிரல் விட்டெண்ணலாம். இருவர் திறனும் இங்ஙனம் இருக்க, சண்டையின் முடிவு இன்னதென்று தீர்மானமாய் சொல்லிவிடலாம். எண்ணூறு வருஷத்திற்குமேல் செருக்குடன் சுயாதிபத்யம் செலுத்திவந்த மீவார ராஜ்யத்தின் கொடியைத் தாணித்து முகல் சாம்ராஜ்யத்திற்குத் தலைவணங்க வேண்டிய காலம் வந்துவிட்டது.

ராஜபுத்ரர்களைத் தோற்கடித்ததையும் அப்பொழுது நடந்த விஷயங்களையும், சக்ரவர்த்தி தம் கையெழுத்திலேயே தம்முடைய குறிப்புப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறார். இதில் ராணுவையும் அவருடைய வீரர்களுடைய திறனையும்பற்றி வெகுதூரம் புகழ்ந்திருக்கிறார்: நாட்டைவிட்டு ஓடிப்போவதையும் கைதியாக்கப்படுவதையும் தவிர்க்க முடியாதவரையில் அமரஸிங் யுத்தம் புரிந்துகொண்டேயிருந்ததையும் வியந்து எழுதியிருக்கிறார். கடைசியிலும் ராணு தான் நேராக வரமுடியாதென்பதைத் தெரிவிக்கவே, சக்ரவர்த்தி அவருடைய இஷ்டப்படியே ராணுவின் மூத்த குமாரனை அவனுக்குப் பதிலாக வருவதை ஏற்றுக்கொண்டார். சக்ரவர்த்திக்கு வேண்டியதெல்லாம் ராஜபுதனத்தில் ராஜாதிராஜனாய் விளங்கும் மீவார ராணுவும் ஸாம்ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளவேண்டும் என்பதே. ராணு இவ்வளவுதூரம் தம் வழிக்கு வந்ததே அவருக்குப் போதுமானது. டில்லியில் தனது சொந்த குமாரர்களுக்கும் மேலாகவே அமரஸிங்கின் புத்திரனுக்குச் சக்ரவர்த்தியின் வலப்புறத்தில் ஆசனம்

கொடுக்கப்பட்டது. எவ்வளவுதான் மரியாதைசெய்யப்பட்டபோதிலும், தனது நாடு முழுவதும் திருப்பிக் கொடுக்கப்பட்டாலும் முதல்தர சேனுதிபதியென்று பட்டப்பெயர் பெற்றபோதிலும், அந்த ராஜகுமாரன் இப்போது 1500 ராஜபுத்ர குதிரை வீரர்களுடன் முகல் கொடியின் கீழல்லவோ இருக்க வேண்டுமென்றதை நினைத்து மிகவும் துக்கித்தான்.

அமரஸிங்குக்கு இவ்விதக் கௌரவக் குறைவு பொறுக்கமுடியவில்லை. முகல் சக்ரவர்த்தி எவ்வளவு நல்லவனு யிருந்தபோதிலும் அவர்களுடைய தயவிற் காளாவது அவரால் சற்றும் சகிக்கமுடியவில்லை. உடனே தனது மூத்தகுமாரனுக்குப் பட்டங்கட்டி விட்டு, தான் நவசோகி என்னும் இடத்திற்குப்போய் வசித்துத் தனது கடைசி நாட்களை அங்கேயே கழித்தான்.



## 11. ராஜ ஸிங்



மீவார சுதந்தரத்துக்காகப் போராடிய ராணுக்களின் வீரத்தன்மையையும் அவர்களுடைய விரோதிகளாகிய முகல் சக்ரவர்த்திகளின் மேன்மைக்குணங்களையும் ஒருங்கே சொல்ல வேண்டும். பேருக்காகத்தான் ராணு ஸாம்ராஜ்யத்திற் குட்பட்டது. அவர்களுடைய நாட்டுச் சுவாதீனம் யாதொன்றும் குறைவுபடவில்லை. சக்ரவர்த்திகளுக்கும் அவ் விஷயத்தில் பிரவேசிக்க இஷ்டமில்லை. இவர் பணிந்தார் என்னும் ஒரு சொல்லைப் பிறப்பித்து இவ்வளவு பெரிய

விரர்களுடைய சிநேகத்தைப் பெறவேண்டுமென்பதே அவர்களுடைய இச்சை. தங்களுடைய பூர்ண சுதந்தரத்தில் ஒரெள்ளளவும் குறைவுபடாமல் இருக்க வேண்டுமென்பதற்குத்தான் ராணக்கள் இவ்வளவு தூரம் மன்றாடுவது என்பதை அக்பரும் அவருடைய மகன் ஜிஹாங்கிரும் நன்றாய் உணர்ந்து கொண்டவர்களாய், அவர்களிடம் வெகு பெருந்தன்மையும் உதார குணமும் பாராட்டினார்கள். அமரஸிங்கின் மகன் மரியாதைக்காகக் கொண்டுபோன திறை, சேனை முதலிய எல்லாவற்றையும் திருப்பிக் கொடுத்ததோடு, விலை மதிக்க முடியாத அநேக வெகுமதிகளும் அந்த ராஜபுத்ரனுக்குக் கொடுக்கப் பட்டன. அமரஸிங்கின் மனம் இந் நிலையிலிருக்கும் என்பதை ஜிஹாங்கிர் நன்றாய் அறிந்திருந்தார். ராணா தன்னிடம் நேராக வரவில்லை என்பதை அவர் சற்றும் பாராட்டவில்லை. இனிமேலும் ராணக்கள் பட்டத்திற்கு வந்த பிற்பாடு டில்லிக்குச் சென்று தலைவணங்க முடியாது என்பதையும் ஒப்புக்கொண்டார். மீவார ராஜ குமாரன் சென்றால் போதுமானதென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால் ராணவாகச் சிம்மாசனம் ஏறுவதற்கு முன் தன்னுடைய தலைநகருக்கு வெளியில் வந்து சக்ரவர்த்தியின் தாக்கிதைப் பெற்றுக் கொள்ளவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. ஆகையால், மீவார ராணக்கள் மற்ற ராஜபுத்ர அரசர்களைப்போலத் தங்களுடைய பரிவாரத்துடன் டில்லிக்குச் செல்லாமல் தங்களுடைய குமாரர்களை யனுப்பி வந்தனர். ராஜகுமாரராயிருக்கும்போது சென்று தலை வணங்கினபோதிலும் ராணவானபிறகு போகாமல் முகல் ஸாம்ராஜ்யம் அழியும் வரையில் தங்களுடைய செருக்கை நிலைநாட்டினர்.

அமரஸிங்கின் புத்ர பௌத்ராதியர் காலத்தில் மீவாரத்துக்கு யாதொரு விரோதியும் இல்லாம லிருந்ததோடு ஸாம்ராஜ்யத்திலும் மிகவும் செல்வாக் கிருந்தபடியால் தேசம் மிகவும் செழித்தோங்கியது. விழுந்த அரண்மனைகளும் இடிந்த கோட்டைகளும் திரும்பவும் தலைதூக்கின. ஜனங்களும் பல விதத்தில் க்ஷேமத்தை யடைந்தார்கள். இவ்வாறே ஜிஹாங்கிர் காலத்திலும் அவருடைய மகன் ஷாஜஹான் காலத்தி லும் மீவார நாடேயன்றி ஸாம்ராஜ்யம் முழுவதுமே அமைதி நிலையிலிருந்தது. அக்பரின் விசால நோக்கின் பயனாக இந்துக்களும் முகம்மதியர்களும் தேசத்தின் க்ஷேமத்திற்கு இன்றியமையாத இரண்டு கண்களெனப் பாவிக்கப் பட்டனர். ராஜாங்க விஷயங்களில் இவ் விரண்டு ஜாதியாருக்கும் சற்றும் வித்தியாசம் பாராட் டப் படவில்லை. ஆகையால் ராஜபுத்ரர்களும் முகல் ராஜ்யத்தாரும் அளவளாவினர்.

இஃது இப்படியிருக்க, இவ்வித இனிய நிலையைக் கெடுத்து முகல் ஸாம்ராஜ்யத்தையே வீழ் நிலைக் குக் கொண்டுவர அவுரங்கசீப் என்பவன், குலத்தைக் கெடுக்கும் கோடரிக் காம்புபோல், ஒரு விபரீத விளை வாகத் தோன்றினன். இவன் ஷாஜஹானின் மூன்றா வது புத்திரன். மகா கபடி. எப்பொழுதும் துரெண் ணங்களும் துராலோசனைகளுமே அவன் மனத்தில் குடிகொண்டிருக்கும். தன்னுடைய தகப்பன் உயிரோ டிருக்கும்பொழுதே அவரைத் தள்ளிவிட்டு, தன் தமையன்மார்களையும் தம்பியையும் வஞ்சனையாகத் தொலைத்துத் தான் உடனே சிம்மாசனம் ஏறவேண்டு மென்கிற ஆசைகொண்டவனாய் அதற்கு வேண்டிய படி ரகசியமாகவும் சில விஷயங்களில் பகிரங்கமாயும்

பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தான். ஷாஜஹா னுக்கு நேர்ந்த ஆபத்தைக் கேள்விப்பட்ட ராஜபுத் ரர்கள் உடனே அவருடைய உதவிக்குச் சென்றார்கள். அக்பர் காலம்முதல் இதுவரையில் தங்களை அன்போடு கவனித்து வந்த முகல் சக்ரவர்த்தியைக் காக்க அவர் கள் ஓடிவந்தது ஓர் அதிசயமன்று. அவர்களுடைய முயற்சியெல்லாம் வீணாய்ப் போய் அவுரங்கசீபின் வஞ்சகமே கடைசியில் நிறைவேறியது. தகப்பனைச் சிறைப்படுத்தி, தனது சகோதரர்களையும் தொலைத்து விட்டு அவனே பட்டத்திற்கு வந்துவிட்டான். சக்ர வர்த்தியானதும் தன்னை எதிர்த்த இந்த ராஜபுத்ரர் களின்மீது காரங்கொண்டு அவர்களைச் சிக்ஷிப்பதற்கு உபாயம் தேடிக்கொண் டிருந்தான்.

இச் சமயத்தில் ராஜபுதன நாடுகளில் இருந்த அரசர்களெல்லாம் சாமான்யரல்லர். அம்பர் நாட்டு ஜயஸிங்கும் மார்வார் நாட்டு யசஸ்வந்த ஸிங்கும் அவர்களுள் மகா வீரர்களெனப் பெயர்வாய்ந்தவர்கள். இவர்களைப் போன்ற ராஜபுத்ர அரசர்களின் சிநே கத்தை விடாமலிருந்தால் முகல் ஸாம்ராஜ்யத்திற்கு எப்பொழுதும் கேடு வந்திராது. இப்பொழுது மீவார நாட்டை யாண்ட ராணா ராஜஸிங் என்பவரும் தம் முன்னோருடைய வீரத்தன்மையெல்லாம் ஒருங்கே பெற்றவர். அவுரங்கசீப் இந்துக்களை வதைக்க ஆரம் பிக்கவே சகல ராஜபுத்ரர்களும் ராஜசிங் உதவி யையே முக்கியமாய் எதிர்பார்த்திருந்தார்கள். ஒரு தரம் இம முகல் சக்ரவர்த்தி ரூபநகரத்து ராஜபுத்திரி யைத் தான் கொள்ள இச்சித்து இரண்டாயிரம் குதிரை வீரர்களை யனுப்பி அவளைத் தன்னிடம் அழைத்து வரும்படி சொல்லியனுப்பினான். இச் செய்தியைக்

கேள்விப்பட்ட அம் மாது மிகவும் கோபங்கொண்டு, ராஜபுத்ரத்தலைவனுகிய ராணுவுக்குத் தன்னை வந்து காக்கும்படியாக ஒரு கடிதம் எழுதி, அதில், "ஒரு ஹம்ஸ பக்ஷியானது நாரையைப் போய் மணக்குமோ? மகா பரிசுத்தமான ராஜபுத்ர வம்சத்தில் பிறந்த நான் கேவலம் இந்த மிலேச்சக் குரங்கினிடமா போய்ச் சேருவேன்?" என்று சொல்லி, தனது மானத்தைக் காப்பதற்குப் பிரதியாக தன்னையே மகா ராணுவுக்குக் கொடுத்து விடுவதாகவும் தன்னுடைய புரோகிதர் மூலமாகச் செய்தி யனுப்பினுள். இளம்பிராயமும் வீர மிடுக்கும், தமது முன்னோர்களுக்குள்ள பெருந்தன்மையுமுள்ள ராணுவுக்கு முகல்சேனைகளின் மீது பாய இதுவே ஒரு தகுந்த சாக்காயிற்று. உடனே சில வீரர்களுடன் புறப்பட்டு ரூபநகரத்தின் முன் தோன்றி அங்கிருந்த முகம்மதியர்களைத் துரத்திவிட்டு அந்நகரத்து ராஜபுத்ரர்கள் கோஷிக்க அம் மாதைத் தூக்கிக்கொண்டு வந்து விட்டார். இதைக் கேட்ட அவுரங்கசீப், ராணுவை எதிர்த்துச் செல்லுவதற்குமுன் மார்வார், அம்பர் நாட்டரசர்களை முதலில் கொல்லவேண்டுமென்று எண்ணி அவர்களை வஞ்சகமாக விஷமிட்டுக் கொல்ல ஏற்பாடுகளைச் செய்து அங்ஙனமே நிறைவேற்றினுன். பிறகு ஸாம்ராஜ்யத்தில் உள்ள இந்துக்களின்மீது ஜசியா என்னும் மதவரியைப் போட்டான். மார்வார தேசத்து ராணியானவள் தனது மகனைக் காக்கும் பொருட்டு ராணுவைக் கேட்க அவரும் ஒப்புக்கொண்டார். மதவரியைப்பற்றிக் கேள்விப்பட்டதும் ராணு சக்ரவர்த்தியை எதிர்க்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார். இருந்தபோதிலும் முதலில் அவனுக்குத் தகுந்தபடி புத்திசொல்லி,

வெகு மரியாதையாயும் பெருந்தன்மையுடனும் ஒரு கடிதம் எழுதி யனுப்பினர்.

எதுவும் அந்த மூர்க்க சக்ரவர்த்தியின் காதில் ஏறவில்லை. இவ்வளவு தூரம் தைரியமாய்த் தனக்குக் கடிதம் எழுதினதும், மார்வார ராணிக்கு அபயம் கொடுத்ததும், தான் கண்வைத்திருந்த ரூபநகரத்து ராஜபுத்ரியைக் கைக்கொண்டதும் அவுரங்கசீபின் மனத்தை அறுத்துக்கொண்டே இருந்தன. தனது ஸாம்ராஜ்யத்திலுள்ள சேனைகளையெல்லாம் சேர்த்துக் கொண்டு தன்னுடைய முழுப் பலத்துடன் மீவார ராணாவின்மீது பாய வேண்டுமென்று கிளம்பினான். அவன் இதற்காகச் செய்த முன் யோசனைகளையும், ஏராளமான ஏற்பாடுகளையும் பார்த்தால் முகல் ராஜ்யத்தில் நூற்றில் ஒரு பங்குகூட விஸ்தீர்ணமில்லாத மீவார தேசமாகிய வெகு சிறிய ராஜபுத்ர நாட்டின் வீர மகிமை நன்றாய்ப் புலப்படுகிறது. ராஜ்யத்தில் வெவ்வேறு திக்கிலிருந்த தனது புத்திரர்களை யெல்லாம் அவர்களுடைய சேனைகளுடன் வரவழைத்துக் கொண்டு, அவுரங்கசீப் ராஜபுதனத்திற்குள் பிரவேசித்து மீவார நாட்டிற்கே வந்து விட்டான்.

இதற்குள் ராணாவும் வேண்டிய பிரயத்தனங்களை யெல்லாம் செய்துகொண்டு ராஜபுத்ரவீரர்களை யெல்லாம் சேர்த்துத் தயாராக்கித் தன்னுடைய மூத்த குமாரனாகிய ஜயஸிங்கை அரவலி மலைச்சிகரத்தின் புறமாகச் சேனைகளுடன் நிறுத்தி, இரண்டாவது பிள்ளை பீமஸிங்கையும் அவனுடைய ஆட்களையும் குஜராத் நாட்டுப்புறத்தில் இருந்து பார்த்துக்கொள்ளும்படி வைத்துவிட்டு, தாம் தம்முடைய கைதேர்ந்த வீரர்க

ளுடன் எதிரியைத் தாக்குவதற்குச் சரியான இடம் ஒன்று பார்த்து அங்கே நின்று கொண்டார். அவுரங்கசீப் தன்னுடைய பிள்ளை அக்பரிடம் 50,000 ஆட்களைக் கொடுத்து அவர்களை நேராகத் தலை நகருக்கே போகும்படி கட்டளையிட்டான். அக்பர் சென்று அந் நகரில் யாருமில்லாமல் ஊர் முழுவதும் பாழாய்க் கிடந்தது கண்டு அங்கேயே பயமின்றிச் சாவகாசமாய் முகாம் போட்டுக்கொண்டான். இதுதான் சமயம். ராணுவின் மூத்த குமாரன் தன்னுடைய சேனைகளுடன் இவர்களைத் திடீரென்று தாக்கவே, அக்பரும் முகம்மதிய ஆட்களும் தப்பியோட ஆரம்பித்தார்கள். போகும் வழியில் பில் என்னும் மலைநாட்டாரும் இவர்களை எதிர்க்க, அக்பர் மிகவும் திகைத்து, ராணுவுக்குக் கீழ்ப்படிந்ததாகவும் தன்னை எப்படியாவது தப்புவிக்கவேண்டு மென்றும் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளவே, அதிதயாள குணமுள்ள ராணு இவர்களைத் தடுக்காமல் வழிகாட்டிப் போகச் சொல்லும்படி உத்தரவளித்தார்.

இம் மாதிரியாகவே முகம்மதிய சேனைகளெல்லாம் பல இடங்களில் ராஜபுத்ர சேனாதிபதிகளிடம் சிக்கிக் கொண்டு திண்டாடிக் கடைசியில் தீர முறியடிக்கப் படவே, சக்ரவர்த்தி தனது தலை தப்பினது தம்பிரான் புண்ணியமென்று தன்னுடைய ஆட்களை அங்கேயே விட்டுவிட்டுத் தான் டில்லியைப் பார்க்க ஓடிவிட்டான். ராணுவின் வீரர்கள் சும்மா இருக்கவில்லை. அவருடைய மகன் பீமஸிங் குஜராத்தை எதிர்த்துச் சென்று அங்குள்ள நகரங்களைத் தொம்சம் செய்துகொண்டிருக்க, குஜராத் ஜனங்கள் ராணுவினிடம் வந்து தங்களை மன்னிக்கும்படி வேண்ட அவரும் தம்முடைய மக

னைத் திரும்பி வரும்படி கட்டளையிட்டார். ராஜஸிங்கின் மந்திரியும் ஒரு பக்கத்தில் சக்ரவர்த்தியின் சேனைகளைத் துரத்திக்கொண்டு வந்தான். இப்படிச் சகலரும் சேர்ந்து எதிரிகளை மீவாரத்திலிருந்து ஓட்டி விட்டார்கள். உடனே ராணு தம்மிடம் அபயம் பெற்றுக்கொண்ட மார்வாரினிக்காக யுத்தம் புரியத் தொடங்கினர். மார்வார ராஜபுத்ர வீரர்களெல்லாம் ராணுவின் கீழ்வந்து சேரவே, அங்குள்ள அக்பரும் அவனுடைய சேனைகளுடன் எதிர்த்து வந்தான். சண்டை நடந்துகொண்டிருக்கும்பொழுது ஒருநாள் இரவில் ஒரு ராஜபுத்ரத் தலைவன் 500 ஒட்டகங்களைப் பிடித்து அவைகள் ஒவ்வொன்றின் தலையிலும் ஒவ்வொரு தீப் பந்தத்தைச் சொருகி அவைகளை எதிரிகளின் இடையில் ஓட்டிவிடவே, முகம்மதிய சேனை முழுவதும் கலந்து ஓட ஆரம்பித்தது. அச் சமயத்தில் ராஜ புத்ரர்கள் அவர்களைத் தாகி முறியடித்தனர்.

இவ்விதம் விடாமல் ஜயமடைந்து வரவே, ராணுவும் அவருடைய சிநேகிதர்களும், இக் கொடுங்கோல் மன்னனாகிய அவுரங்கசீபைத் தள்ளிவிட்டு அவனுடைய புத்திரனாகிய அக்பரைச் சக்ரவர்த்தியாக்கி வைக்கவேண்டுமென்று எண்ணங் கொண்டார்கள். இந்த விஷயத்தை அக்பருக்குத் தெரிவிக்கவே அவனும் வெகு சந்தோஷமாய் ஒப்புக் கொண்டான். ஆனால் அவனுக்கு அவன் தகப்பனுக்குள்ள அவ்வளவு கபடமில்லாததனால் காரியம் கெட்டுப் போயிற்று. இந்த ஆலோசனை எப்படியோ அவுரங்கசீபின் காதிற்கு எட்டிவிட்டது. உடனே அக் கபடி தனது மகனுக்கு நேரும் அபாயத்தையும் நினைக்காமல்

அவனை வஞ்சகமாகத் தொலைக்கவேண்டுமென்று நிர்மானித்தான். அக்பருக்கு ஒரு ரகசிய கடிதம் எழுதுவதுபோலப் பாசாங்கு செய்து அதில் தனது மகனை ராஜபுத்ரர்களோடு சேர்ந்துகொண்டேயிருந்து அவர்கள் சக்ரவர்த்தியின் சேனைகளுடன் போர் புரியும்போதும் சிநேகிதன் போலவே நடித்துச் சமயம் பார்த்து ராஜபுத்ரர்களின்மீது பாய்வதற்கான உபாயங்களைத் தெரிவித்தவன் போல எழுதி, அக் கடிதத்தை ராஜபுத்ர சேனாதிபதியாகிய துர்க்க தாஸின் முகாமில் அக்பருக்கு வந்த கடிதம ஏதோ தவறி விழுந்ததுபோல் தெரியும்படியாகப் போட்டு விடும்படி ஏற்பாடுகளைச் செய்தான். இந்த வஞ்சகமும் நிறைவேறியது. ராஜபுத்ரர்கள் அக்பரைத் தள்ளிவிட்டார்கள். ஆனால் ராணாவின் தயாளகுணத்தினால் அவனுடைய உயிருக்கு மோசம் வரவில்லை. இருந்தபோதிலும் இவ்வித அபாய நிலையிலிருப்பது பிசகு என்று கொண்டு, அக்பர் பர்ஷியாவுக்கு ஓடிப் போய்விட்டான்.

இதற்குள் முகல் ராஜ்யத்திற்குக் கேடு விளைக்கும் மராட்டியர் முதலிய பல விரோதிகள் தெற்கிருந்து கிளம்பவே, அவரங்கசீப் ராஜபுத்ரர்களுடன் போர் புரிவதை நிறுத்த வேண்டியதாயிற்று. நேராக அவர்களுடன் சமாதான உடன்படிக்கைகள் செய்து கொள்ள இஷ்டமில்லாதவனாய் மறுபடியும் ஒரு வஞ்சகத்தொழிலை ஆரம்பித்தான். தன்னிடம் வெகு நாளாய் உத்தியோகஸ்தனாயிருந்த ஒரு ராஜபுத்ரனை மீவாரத்துக்குச் சென்று பிழைக்க வந்தவன் போல் நடிக்கச் சொல்லி, அவன் மூலமாக ராணாவைத் தன்னோடு உடன்படிக்கை செய்து கொள்ள இதுதான்

சமயம் என்று சொல்லி அவரை அதற்குவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தூண்டச் சொன்னான். இது வாஸ்தவம் தான் என்று ராணு தனது சேனைகளைப் போர் முனைகளிலிருந்து வரவழைத்துக் கொண்டிருக்கும் சமயத்தில் அவர்மீது பாயத் தனக்கு சௌகரியப் பட்டால் சந்தர்ப்பம் நேரட்டும் என்கிற எண்ணத்துடன் தான் சக்ரவர்த்தி இவ்வாறு செய்தது. ஆனால் அப்படிச்செய்ப அவரங்கசிபுக்குச் சந்தர்ப்பப படவில்லை. இருந்தபோதிலும அவன் இவ்வளவு தூரம் வஞ்சனைகளைச் செய்து கொண்டிருந்த சமயங்களிலும் ராணு ராஜஸிங் தம் முன்னோர்களுடைய பெருந்தன்மையையே காட்டித் தம்முடைய சத்ருருக்களை அநேகந் தரம் மனமிரங்கி ஆபத்துக்களினின்றும் விடுவித்தது இங்கு நன்றாய்க் கவனிக்கத்தக்கது.

ராஜஸிங் மீவார ராணுக்களில் மிகவும் கீர்த்தி பெற்றவர்களுள் ஒருவர். இவருடைய காலத்தில் மீவாரத்திற்கு மறுபடியும் வீரப்பெருமை யெல்லாம் திரும்பி வந்தாற்போல் தோன்றிற்று. ஆனால் முகலரசன் எதிர்த்து வந்தபோது தேசத்தில் மழை தப்பிப்போய்ப் பஞ்சம் அதிகமாயிருந்தது. முகம்மதியர்கள் துரத்தப்பட்டதும் தம்முடைய நாட்டு ஜனங்கள் பிழைப்பதற்கு ஒருவழி ஏற்படுத்தும் பொருட்டு ராணு ராஜசமுத்திரம் என்னும் சிறந்த பெரிய ஏரியைக் கட்டினார். இதைக் கட்டி முடிக்க ஏழு வருஷ காலமாயிற்று. அந்த ஏரியின் கரைகளினுடைய உறுதி மிகவும் வியக்கத்தக்கது. பன்னிரண்டு மைல் சுற்றளவுள்ளது. அதன் தென்புறத்தில் ராஜநகர் என்னும் நகரும் கட்டப்பட்டது. இவைகளை யெல்லாம் கட்டிமுடிக்க ஒன்றரைக் கோடி ரூபாய்க்குமேல் செல

விடப்பட்டதாகச் சொல்லியிருக்கிறது. இவ்வளவும் பஞ்சத்தின் கொடுமையைத் தணிப்பதகாகவே முக்கியமாய்ச் செய்யப்பட்டது என்பதுதான் ராணாவின் உதாரகுணத்தையும் விசால நோக்கத்தையும் காட்டுகின்றது.

இதுவரையில் ஸிசோதயர்களுடைய சரித்திரத்தில் அவர்கள் சித்தூரை ஆண்டுவந்ததும், அந்த அழகிய நகரைக் காத்துவந்ததும், ராஜபுத்ர சுதந்தரத்துக்காகப் பாடுபட்டதும, கடைசியில் ஜிஹாங்கிரின் கொடிக்குப் பணியவேண்டிய காலம் வரையில் அவர்கள் போராடியதும், அவுரங்கசீப் என்னும் சக்ரவர்த்தியோடு முரணி வந்ததும் கண்டோம். இதற்கு மேல் நடந்தவைகள் அதிகமாய்க் கவனிக்கத்தக்கவையல்ல. முகல் ராஜ்யம் விழுந்தது தடியெடுத்தவனெல்லாம தண்டக்காரனாய் விட்டான். ராஜபுதனத்திலும் உள்நாட்டுக் கலகங்கள் உண்டாயின. அத்தேசத்தைத் தெற்கிருந்து மராட்டியர்கள் கூட்டங் கூட்டமாக வந்து கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள். அவர்களுடைய தலைவர்களுள் முக்கியரான ஸிந்தியாவும், ஹோல்காரும் மிகவும் கிராதகர்கள். திடீரென்று ராணாவின் நாட்டின்மீது பாய்வதும், தலைநகருக்கே வந்து ராணாவின் அரண்மனையைச் சுற்றி நின்றுகொண்டு அவரை வதைப்பதுமாக இருந்தார்கள். இவர்களைப் பணம் கொடுத்துத் துரத்தத் துரத்த திரும்பியும் வந்துகொண் டிருந்தார்கள். மீவார நாட்டுச் செல்வமெல்லாம் இப் பாதகர்களால் கொள்ளையிடப்பட்டுக் குடிகளெல்லாம் அலறிக் கொண்டிருக்க, ராணாவானும அவர்களைக் காக்க முடியாமல் போயிற்று. அரண்மனையிலுள்ள ஆடை யாபரணங்

களையும் விற்று இக் கொள்ளைக்காரர்களுக்குக் கொடுத்துவிட வேண்டிய காலம் வந்தது.

ராஜபுத்ரர்கள் இங்ஙனம் தவித்துக் கொண்டிருக்க, இதற்குள் இந்தியாவின் பல பாகங்களில் வியாபாரத்தினாலும் ஆளுகையினாலும் இங்கிலீஷ் காரர்களுக்கு வரவரச் செல்வாக்கு அதிகரித்து, அவர்களுடைய தயவையே ராஜபுதனத்தோர்களும் எதிர் பார்த்தார்கள். இங்கிலீஷ்காரர்களுக்கும் இம் மராட்டிய கொள்ளைக்காரர்களுக்கும் யுத்தம் மும்முரமாகிக் கொண்டு வரவர ராஜபுத்ரர்களுக்கு நல்ல காலம் பிறந்தது. ஸிந்தியா, ஹோல்கார் முதலிய சகல மராட்டியத் தலைவர்களும் ஒருவர் பின் ஒருவராகத் தோற்கடிக்கப்பட்டு இங்கிலீஷ்காரர்களுக்கு அடங்கி அவர்களுடன் சமாதானம் செய்து கொண்டார்கள். இதைக் கண்ட அநேக சுதேச ராஜாக்களும் ஆங்கிலருடைய உதவியை எதிர்பார்த்துச் சிநேக உடன் படிக்கை செய்து கொண்டனர். அவர்களுள் மீவார ராணாவும் ஒருவர். இதற்குப் பிறகு வெளி நாட்டுப் பயம் யாதொன்றுமில்லாமலும் தங்களுடைய சுயாதிபத்யம் சற்றும் குறையாமலும் இருக்க, அதே மீவார நாடும் அதன் அழகிய தலைநகராகிய உதயபுரியும் இன்னும் சிசோதைய ராணாவால் ஆளப்பட்டு வருகிறது.




Printed at the Caxton Press, Madras, E. — 1920.

## அனுபந்த வாசக புத்தகங்கள்

1. ராஜபுத்ர வீரர்கள்
   டி. லக்ஷ்மிநாராயண ஐயங்கார், பி. ஏ. ... 0 6 0
2. இதோபதேசம்
   சுன்னாகம் அ. குமாரசுவாமி பிள்ளை ... ... அச்சில்
3. கிருஷ்ணபாய்
   ஜி. ஆர். விசாலாக்ஷியம்மாள் ... ... ,,
4. சத்தியபதி
   எஸ். நரசிம்ஹாச்சாரியார், பி. ஏ., பி. எல். ... 0 5 0
5. மந்திரமணி
   வே. இராஜகோபால அய்யங்கார் ... ... 0 2 0
6. குரு[illegible]
   வி. என். இராம[illegible]ஐயர் ... ... 0 1 6
7. திருநாவுக்கரசர்
   எஸ். தண்டபாணி செட்டியார் ... ... 0 1 0
8. இராமானுஜர் ... ... ... 0 1 0



### கம்பராமாயணம்

பாலகாண்டம் (கருக்கம்) ... ... 0 10 0
அயோத்தியாகாண்டம் (கருக்கம்) ... 0 10 0

## இராமாயணம் தமிழ் வசனம்

எம். மாணிக்கவாசகம் பிள்ளை எழுதியது

சித்திரப்படங்கள் உள்ளது.

1. பால காண்டம் ... ... ... 0 8 0
2. அயோத்தியா காண்டம் ... ... அச்சில்
3. ஆரணிய காண்டம் ... ... ,,
4. கிஷ்கிந்தா காண்டம் ... ... ,,
5. சுந்தர காண்டம் ... ... ... 0 10 0
6. யுத்த காண்டம் ... ... ... 1 0 0



